# KUYILIN SRUTHI
(Poems)

by

N. Pichamurthi

bookventure
Madras - 17

வாசகர் வட்டப் பிரசுரம்

இப்பதிப்பு "வாசகர் வட்டம்" — சிறந்த தமிழ்ப் புத்தகச் சங்கத்தின் பதிப்பாளரான "புக்வெஞ்சர்" (bookventure) நிறுவனத்தினரால் நெ. 14, தணிகாசலம் செட்டி ரோடு, தியாகராயநகர், சென்னை-17 — என்ற முகவரியில் வெளியிடப்பட்டது.

அச்சிட்டவர்கள் :
ராமன்ஸ் பிரிண்டிங் பிரஸ்,
நெ. 81-5 பாண்டிபஜார்,
தி. நகர், சென்னை-17

ஓரத்தாள், உள் ஓவியங்கள் :
கலாஸாகரம் ராஜகோபால்



ஏப்ரல் 1970

## ஆசிரியரின் பிற நூல்கள்

**சிறுகதைகள் :**

பதினெட்டாம் பெருக்கு
ஜம்பரும் வேஷ்டியும்
மோகினி
பிச்சமூர்த்தி கதைகள்
மாங்காய்த் தலை
இரட்டை விளக்கு

**குறுநாவல் :**

குடும்ப ரகசியம்

**நாடகம் :**

காளி

**புதுக் கவிதை :**

காட்டு வாத்து
வழித்துணை

# முன்னுரை

கவிதை என்பது என்ன என்ற கேள்விக்கு இது வரையில் யாராலும் சரியான விடை காண இயலவில்லை. அசை, எதுகை, சீர், அடி, தளை, மோனைகளினாலோ, ஒலி அழுத்தத்தினாலோ அமைவது கவிதை என்று கூறுவது அதன் முழுத் தன்மையையும் விளக்கப் போதுமானதல்ல. அதற்காக, விடைகாணும் முயற்சியை நழுவவிடுவதற்குமில்லை. ஓயாமல் புற உலகினின்று பல விதமான தூண்டுதல்கள் நம்மைத் தாக்கிக் கொண்டே இருக்கின்றன. இத் தாக்குதல்களின் விளைவாக மனதில் திகைப்பு, வியப்பு, வேதனை, நெகிழ்ச்சி, மகிழ்ச்சி முதலிய பல உணர்ச்சிகள் தோன்றி கிளர்ச்சியை உண்டாக்குகின்றன, பல சமயங்களில் எண்ணங்களின் எழுச்சியே மனதை அலைப்பதும் உண்டு. இவை எல்லாம் மனதில் ஏற்படுத்துகின்ற ஆழ்ந்த, மெய்யான, ஒரு அனுபவம், மனதை விட்டு விடுபட்டு உருக்கொள்ளத் தவிக்கும் பொழுது கற்பனையும், தேர்ந்த சொற்களும், படிமமும் சேர்ந்து, கவிதையாய் மலர்கிறது. இக்கவிதையும் இத்தூண்டுதல்களுக்கு எதிரொலி என்ற வகையிலோ, தூண்டுதல்களுடன் இணைந்து சிறக்கும் வகையிலோ, அல்லது அவற்றைப் புறக்கணித்து வாழ்வை விமர்சிக்கும் வகையிலோ அமையலாம். என்ன ஆராய்ந்தாலும் கவிதை காற்றைப்போல, விளக்கத்திற்கு அப்பாற்பட்டதாக நிற்கிறது. ஆனால், இரண்டையும் உணர முடியும். அனுபவமே கவிதைக்கு மூலமும் உரைகல்லுமாகும்.

கவிதையை விட்டு விட்டு, தமிழ்க் கவிதை உருக் கொண்டுள்ள யாப்பு வகைகளின் பரிணாமத்தைப் பார்க்குங்கால் ஆசிரியப்பா, வெண்பா, வஞ்சிப்பா, கலிப்பா ஆகிய நால்வகைக் கவிதையும், துறை, தாழிசை, விருத்தம் என்ற பாவினங்களாக விரிவடைந்திருப்பது புலனாகிறது. அதிலும் விருத்தம் என்ற பாவினம், சந்த விருத்தம் என்ற வகையாகவும் வளர்ச்சி அடைந்திருக்கிறது. அசையின் அடிப்படையில் எழுந்த கவிதை மாத்திரையின் அடிப்படைக்கு மாறிவிட்டது. தமிழ்க் கவிதையில் ஏற்பட்டுள்ள இந்த மாற்றம் பற்றிக் கூறும் யாப்பிலக்கணம் ஏதுமில்லை. முதல் முதலாக, திரு. வீரபத்ர முதலியார் அவர்களே '' விருத்தப்பாவியல் '' என்ற நூலில் தமிழ் விருத்தங்களுக்கு மிகுந்த புலமையுடன், சிறந்த இலக்கணம் ஒன்றை அமைத்துத் தந்திருக்கிறார். இன்னும் விரிவான யாப்பாராய்ச்சிக்கு இடம் இருப்பதாகவே நான் கருதுகிறேன்.

யாப்பு முறையில் அடங்காத இசைப் பாடல்கள் என்ற ஒரு வகையும், நாட்டுப் பாடல்கள் என்ற ஒரு வகையும் மரபான தமிழ்க் கவிதையுடன் தோன்றி வளர்ந்து வந்திருப்பதையும் இங்கு குறிப்பிட வேண்டும். கவிதையில் புதுமை செய்ய விரும்பிய பாரதியார், இசைப் பாடல்களுக்கு முதன்மை தந்தார். பாரதியார் காட்டிய வழியிலேயே இப்பொழுதும் தமிழ்க் கவிதையின் ஒரு பகுதி செல்கிறது.

கடல் போன்று விரிந்த தமிழ்க் கவிதைக்கு எவ்வளவு துறைகள் இருந்தாலும் தேவை அடங்காது.

ஆரம்பத்தில் நான் ஆங்கிலக் கவிதையில் ஈடு பட்டிருந்த பொழுது, அமெரிக்கக் கவிஞர் வால்ட் விட்மனின் ''புல்லின் இலைகள்'' என்ற தொகுப்பைப் படிக்க நேர்ந்தது. கவிதைகள் ஆங்கில யாப்புக்குப் புறம்பாக அமைந்து, புது உருவத்தோடு முழுத்தன்மையுடன் செயல்பட்டிருப்பதைக் கண்டு ஆழ்ந்த கிளர்ச்சி அடைந்தேன். பின்னர், பாரதியாரின் கவிதைகளில் ''காட்சி'' என்ற வசன கவிதைப் பகுதியைப் படித்த பொழுதும் இதே விதமான கிளர்ச்சி அடைந்தேன். அப்பொழுது, யாப்பு என்ற சொல்லுக்குப் பொருள் தேடுங்கால் விலங்கு என்றதொரு பொருளுமிருக்கக் கண்டேன். இவற்றின் விளைவாக தளை முதலியவற்றின் உதவி இன்றியே தமிழிலும் கவிதை இயற்றி,மேல் நாட்டுக் கவிதை எல்லைக்குத் தமிழ் கவிதையையும் இட்டுச் சென்று விட வேண்டும் என்ற தூண்டுதல் என்னுள் தோன்றவே, புதுக் கவிதை முறையை 1934ஆம் வருட வாக்கில் சோதனையாக ஆரம்பித்தேன். தொடர்ந்து புதுக் கவிதைகளை எழுதினேன்; எழுதியும் வருகிறேன். அப்பொழுது என்னைப் போல வேறு சிலரும் இத்துறையைப் பயின்றனர். இப்பொழுது பலரும் 'புதுக் கவிதை' எழுதி வருகின்றனர். ஆயிரங்காலத்துப் பயிரான தமிழ் கவிதையுடன் ஒப்பிடும் பொழுது, புதுக் கவிதை தோன்றி சுமார் முப்பத்தி ஐந்தே ஆண்டுகள் ஆகியிருப்பதை நினைவில் கொள்ள வேண்டும். இப் புதுச் சோதனை தொடரும் என்றே நான் நம்புகிறேன். இந்த முறையில் நான் எழுதிய கவிதைகள் ''காட்டு வாத்து'', ''வழித்துணை'' என்ற தலைப்புகளுடன் தொகுத்து வெளியிடப் பட்டிருக்கின்றன.

மனதிற்கு விஷேதமான ஒரு இயல்பு உண்டு. எந்த நிலையில் அது இயங்கி வருகிறதோ அதற்கு நேர் எதிரிடையான முறையில் இயங்க வேண்டு மென்ற நுண்அவா மனதில் எழுவதுண்டு; அந்த முறையில் செயல்படுவதும் உண்டு. ஆழ்ந்து நோக்கினுல் உலகம் என்பதே எதிரிடைகளின் இயக்கு என்ற உண்மை புலப்படும். இந்த மாதிரி எதிரிடையான தூண்டுதல் என்னுள் ஏற்பட்ட தும், அப்பொழுதே மரபான முறையிலும் கவிதையை அமைத்துப் பார்க்கலாமே என்று தோன்றிற்று. அதன் விளைவாக, யாப்புக்கிணங்க கவிதைகளும் புனைந்தேன். அவ்வப்பொழுது அவை பத்திரிகைகளில் வெளியாகி இருக்கின்றன. 1946, 1947 வாக்கில் 'குயிலின் சுருதி'யும், 'போரிய'லும் 'சிவாஜி' மலர்களில் வெளிவந்தன. சில ஆண்டுகளுக்குப் பிறகு 'குமாஸ்தா பாட்டு' 'தேனீ'யில் வெளியாயிற்று. இவைகளுக்கு முன் னரே எழுதப்பட்ட 'காதலின் இரவு' 1968-ல் 'எழுத்து' பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டது. 'அனங்கன் பிறப்பு' என்ற கவிதை மட்டும் எழுத்துப் பிரதியாகவே இருந்துவந்தது.

இத் தொகுப்பை வெகு அழகிய முறையில் வெளியிட்டுள்ள ''வாசகர் வட்ட'' நிறுவனத் தாருக்கு என் நன்றி உரியது.

அமைந்தகரை
சென்னை
8-3-1970

ந. பிச்சமூர்த்தி

# தூண்டுதல்

பில்வமங்கள் என்ற பெயரைச் சொன்னால் பலருக்குத் தெரியாது. ஆனால், சிந்தாமணி என்று சொன்னால் தமிழ் நாட்டில் தெரியாதவர்களே இருக்க மாட்டார்கள். ஏனெனில் சிந்தாமணி அவ்வளவு புகழ்பெற்ற சினிமாப் படம். பல வருஷங்களுக்கு முன்பு இப்படத்தைப் பார்த்தபொழுது இந்தக் கதை என்னைக் கவர்ந்தது. குறிப்பாக கதையில் வரும் கடைசி இரவுப் பகுதி என்னை மிகவும் நெகிழச் செய்தது. அதன் விளைவே இச் சிறுகாவியம்.

இக்காவியத்தைப் படித்தால் சினிமாக் கதையினின்று, குறிப்பிட்ட ஒரு விஷயத்தில் வேறுபாடு இருப்பது புலனாகும். சினிமாக் கதையில், பில்வமங்களன், மனைவி கடும் நோய்வாய்ப்பட்டிருப்பதைப் பொருட்படுத்தாமல், கடும் மழையில், காதலியைத் தேடிச்சென்றதாகவும், மனைவி மனம் நொந்து ஆற்றில் மூழ்கி இறந்து விடுவதாகவும், ஆற்றைக் கடந்துபோகும் அவசியம் பில்வமங்களனுக்கு நேரும்பொழுது, எதுவும் தெரியாமல், ஆற்றில் மிதந்து வந்த மனைவியின் பிணத்தையே தெப்பக்கட்டையாக அவன் பயன்படுத்தியதாகவும் கதை அமைந்திருக்கிறது. நளாயினியைப் போற்றிய காலத்தில் ஒரு மனைவி இந்தநிலையில் தற்கொலை செய்துகொள்வாள் என்பது, எனக்குப் பொருத்தமாகப் படவில்லை. எனவே, நோய்வாய்ப்பட்டிருப்பது பில்வமங்களனின் தந்தை என்றும், ஆற்றில் மிதந்து வந்தது ஏதோ ஒரு பிணமென்றும், கதையை என் மனத்திற்கொப்ப மாற்றி அமைத்திருக்கிறேன். சினிமா பார்த்த நினைவும், என் கற்பனையுமே இந்தக் காவியத்திற்கு ஆதாரம்.

# காதலின் இரவு

[சிந்தாமணி என்னும் தாசி வெளிமாடியில் நாற்புறமும் பார்த்து வருந்திக் கொண்டு இருக்கிறாள்.]



"ஆசைதரு வானமதி
ஆடரங்கம் எங்கே?
பேசவரு தாரகையின்
பேதமைகள் எங்கே?
வாசமல ரோடிணையும்
மாருதம்இன் றெங்கே?
மோசமுற வானுடலை
மூடுதிருள் ஐயோ!

மூடுமிருள் முத்தமிட
மூலைகள் இருக்கும்,
நீடுவெளி தொட்டணைய
நீலஎழில் நிற்கும்.
வீடுவரும் புள்ளடைய
வேங்கையும் இருக்கும்,
வாடுமொரு மங்கைஎனில்
மாயசதி ஏனோ?

வீசுபுயல் வாரிஎன
வீதியை நினைத்தோ,
பேசுமிருள் பாதைஒரு
பேரரவம் என்றோ
காசுபெறும் வேசிஎனக்
காதலியைக் கொண்டோ
தேசுதரும் வீடிதனைத்
தேடும்உளம் கொன்றான்?



முன்னவரின் நீள்பெருமை
மூழ்குமெனக் கொண்டோ
அன்னையிடும் ஆணைகளின்
ஆத்திரமும் தைத்தோ
பொன்னனைய நாயகியின்
போதனைகள் ஏற்றோ
என்னவெனும் ஆகஅவள்
என்றுளம் ஒழிந்தான்.

ஆடுமகள் சாதியினில்
ஐங்கணைகள் தின்ன
வாடுபவள் என்பதனை
வாங்கமனம் இன்றி
போடும்இறைக் காகஎனப்
பொய்யுறவு காட்டி
ஓடிவிடும் நாயிவள்என்
றோடிஒளிந் தானோ ?

காத்திருந்தும் கண்ணயரக்
காமஅனல் வீச,
பார்த்திருந்தும் பாதைவழி
போந்தநிழல் யாவும்,
வேர்த்திருந்தும் யாதுபயன் ?
வேந்தனவன் காணேன்.
சார்ந்திடலென் பாழுமுடல்
சப்ரமஞ்ச கூடம் ?

காற்றின்எழில் பாம்புவெகு
 காரமுடன் சீறும்.
ஆற்றுஜலத் தோட்டம் ஒரு
 ஆனையெனக் கத்தும்.
மாற்றி விழும் ஈட்டிஎன
 மாய்க்கவரும் மின்னல்.
கூற்றுவனின் கோல மிது,
 காதலிஎன் செய்ய?''

வேறு

என்று குமைந்திடும்
 ஏந்திழை யாள் உடல் ஆடிவிழ,
கன்றிய நெஞ்சொடு
 காரகில் வாடைகள் சூழறையில்,
சென்றதும் தன்னுளம்
 தன்னையே தின்பதைக் கண்ட [வுடன்
நன்றிவன் நட்பென
 நன்றிவன் நட்பென நெட்டுயிர்த் [தாள்.

அந்தி சினந்ததும்
 முந்தைய ஆடையை மாற்றுதல் [போல்
சந்தம் இசைப்பதில்
 சார்ந்தவன் ஆவலைச் சாற்று [வதாய்க்
கொந்தி மினிக்கினும்
 கொன்றிடும் பண்புடை
வெந்து கழற்றினள், [மார்பணியை
 வீழ்ந்தனள் மேலிருந்தோர் [அணிலாய்.





அணிலென வீழ்ந்தவள்
  ஆமென மற்ருெரு எண்ணமுடன்
துணிவுடன் வாசலில்
  தொங்கிய தாழினை மாட்டியபின்,
தணிவுறும் மார்பிலும்
  தாவிடும் நெஞ்சிலும் பித்தெழவே
பிணியுறு சேயென
  பின்னும் புரண்டனள் விம்மலுடன்.

விம்மி எழுந்தனள்.
  வீழ்ந்திடும் கூந்தலின் மல்லிகையை
பம்மி வரும்மிகு
  காதலின் பித்துடன் பற்றிடவும்,
எம்பி வரும்துயர்
  ஏறிய கைநகம் ஓர்நினைவில்
இம்மி மலர் மணம்
  ஏதெனச் சொல்லிடப் பிய்த்த
                [தையோ !

காதலின் மெல்லுயிர்
  காட்டி இலங்கிய அம்மலரை
வேதனை யால்அவள்
  வீழ்த்திய செய்தியின் உட்பொருளைச்
சோதனை செய்திடும்
  பேதமை யால்உடல் சோர்வடைய
“ நாதனின் நல்லருள்
  நைந்திடுமோ” என ஐயமுற்ருள்.

ஃ



ஐயம் எழுந்ததும்
அச்சம் எழுந்தது. தன்னறையின்
மையம் இருந்தொளி
மந்திரம் ஓதிய பொன்சுடரைப்
பைய அணைத்திடும்
கற்பனை பற்றவும் தன் மனதில்
"ஐய இதென்ன அடாச் செயல்"
என்னவோர் ஆணை இட.

அஞ்சிடும் நெஞ்சுடன்
அவ்வொளி மங்க இறக்கியபின்
விஞ்சிடும் நற்புகை
வீசிடும் வன்னியில் நீர்தெளித்து,
நஞ்சிடும் மெத்தையை
நாட மறுத்து மடக்கியதும்
துஞ்சிட மண்ணிடை
தொய்ய விழுந்து தளர்வடைந்தாள்.

அறைவெளிக் கப்புறம்
ஆர்த்தெழுந் தோடிடும் வெம்
சிறையிடு வேனெனச் [புயல்கள்!
செப்பிடும் ஏழ்முகில் கைவரிசை!
மறைவினில் கூத்திடும்
வானின ராக்கதர் கால் வரிசை!
நிறை இருள் விண்ணினை
நீவிட ஊர்ந்திடும் மின்அரவம்.



ஆடி மகிழ்ந்தவை
  ஊழி எழச்செயும் அவ்விணையை
வாடி வதங்கிய
  வஞ்சியின் நெஞ்சகம் தூற்றுகையில்,
நாடினன் நித்திரை
  நற்பயனை ஈந்திடும் ஆசையினுல்.
ஓடின காலமும்
  ஓடின ஊழியும் தேய்பிறையாய்.

வேறு

கழிவுறும் நேரம் காணுள்;
  கனவையோ துயிலோ காணுள்;
ஒழிவறும் காற்றைக் காணுள்;
  ஓங்கிடும் வெள்ளம் காணுள்;
வழியுறும் வாதை காணுள்;
  வானிடை மின்னைக் காணுள்;
அழிவுறும் காதல் கொண்டாள்
  ஆழ்ந்திடும் அயர்வைக் கண்டாள்.

சென்றது சிறிய போதோ
  நின்றது சிறிய போதோ
என்றதை ஓராப் பெண்ணுள்
  உணரவும் ஏதோ மெய்யில்,
தன்துகில் நேர்மை ஆக்கித்
  தலையினை நிமிர்த்தும் போது
நின்றனன் மழையில் வந்த
  கருடனை நிகர்க்கும் மெய்யன்.

கண்டவள் கண்கள் நிற்க,
கரும்புவில் புருவம் ஏற,
மண்டிடும் ஆர்வம் பொங்க
மங்களன் தன்னை நோக்கி,
''எண்டிசை மாயப் பாம்பு
இடிமழை மின்னல் ஆக
உண்டியைத் தேடும் காலை
உற்றதென் ?'' என்று கேட்க,

சொட்டு சொட்டாகக் கீழே
சுற்றிடும் நீரைக் கண்டு,
பட்டுடை உடலில் ஒட்டிப்
பழித்திடும் படலம் கண்டு,
வெட்டெனப் பாய்ந்து சென்று
வேற்றுடை அணியத் தந்து,
"மட்டிநான் மயக்கத்தாலே
மறந்ததைப் பொறுப்பாய்'' என்றாள்.

ஒட்டும் ஆடையினை மாற்றி
ஊர்ந்திடும் நீரை ஒற்றி,
''மட்டியா? இல்லை மானே !
மையலின் சிலை நீ '' என்பான்
பொட்டிலே குருதி ரேகைப்
பொருக்கினைக் கண்ட மங்கை
பட்டதோர் மரமே ஆகி,
"பாவி ஈதென்ன ?'' என்றாள்.





குருதி என்றவள் இயம்பக்
குமரனும் பார்த் தரண்டு
வெருவிய தோற்றத் தோடு
வினைஎதும் விளங்கா நின்ற
மருகிய சித்தத் தூடே
மலைஎனும் உறுதி தோன்ற
உருவெளி ஏதோ தன்னை
ஊக்கிய கதையைச் சொல்வான் :

வேறு

"இரவு வந்ததும் எங்கிலும் மங்கிருள்
பரவித் திக்கினைப் பையவே பூட்டிட
விரையும் விந்தையை எண்ணி
[வியக்கையில்
கரவு செய்யக் கவிழ்ந்தன ஏழ்முகில்.

சஞ்சலம்எனச் சாய்ந்தது நீள்மழை,
குஞ்சரம்என வெள்ளம் கொழுத்தது,
வெஞ்சரம்என வீழ்ந்தது வானமின்,
வஞ்சனைஎன வாய்த்தது பேரிருள்.

பஞ்சரக்கிளி பார்க்கும் விசும்பெனச்
செஞ்சரத்தலை தேடும் இலக்கெனக்
கொஞ்சும் இன்னுயிர் கோரும்
[உடல்எனப்
பஞ்சையன் உனைப் பற்றி
[நினைந்தனன்.



தெம்பெனக்குன தன்பு
[திணிக்கையில்
வெம்மழைக்கிடை ஆவியும்
[வெல்லமோ ?
கும்மிருள்எனில் ஆசையும்
[குன்றுமோ ?
கம்பிமின்எனில் காலைப்
[பிணைக்குமோ ?

மனையை விட்டனன் மாயையை
[விட்டனன்
வினையைப் பற்றிய வீரன் எனும்படி,
நினைவு தப்பிய நோயில்
[நெகிழ்ந்திடும்
இனிய தந்தையின் இன்னல்
[மறந்தனன்.

மழையைக் கண்டிலன் மாநிலம்
[கண்டிலன்
பிழையைக் கண்டிலன் பேதமை
[கண்டிலன்
தழையைக் கண்டிலன் தாவிடும்
[மின்னையும்
இழைய ஏங்கும்உன் வேய்ங்குழல்
[ஓசையில்



எண்ணு முன்னர் இராவினைத்
[தாண்டியும்
கன்னி என்றிடக் காரிருள்
[ஊடொரு
தண்ணி தத்தளித் தோடிய ஆறெதிர்
நண்ண நெஞ்சம் நலிந்து
[திகைத்தனன்.

பாம்பெ னும்படி ஆடிடும் பாழலை!
வேம்பெ னும்படி வீசிடும்
[வெண்ணுரை!
தீம்பெ னும்படி தீட்டிய வானிருள்!
கூம்பெ னும்படி குன்றிய
[தார்வமும்.

வனத்தைத் தாண்டவோர் வாகனம்
[உண்டெனில்
மனத்தைத் தாண்டவோர் மந்திரம்
[உண்டெனில்
அனைத்தும் தாண்டவோர் ஆதர
[வுண்டெனில்
கனைக்கும் ஆற்றைக் கடந்திட
[இல்லையோ ?

காலில் தட்டிய கட்டையை
[அக்கணம்
'ஆலின் வேரிது அன்பின்
[வர'மெனப்
போலித் தெப்பம் பொருத்தி
[அவ்வாற்றினை
வேலின் ஒத்த விசையுடன்
[தாண்டினன்.

வெள்ளம் தாண்டி உன் வீட்டை
[அடைந்ததும்
மெள்ள வாயிலைத் தட்டி
[விளித்தபின்
கள்ள மாற்ருெலி தோன்றிக்
['கதவொரு
குள்ள வெற்பென'க் கூறிடக்
[கேட்டனன்.

வெள்ளம் உட்புக வீரலைத்
[தேடுமாம்
கள்ளன் உட்புகக் கன்னம்
[பதிப்பனும்.
மெள்ள நானுமுன் மெத்தையைச்
[சுற்றவும்
வெள்ளித் தாம்பொரு விட்டத்தில்
[கண்டனன்.

கண்ட போததைக் கையினில்
[பற்றிஉன்
சண்டி செய்த சுவர்களைத்
[தாண்டவும்
மண்டும் காதலின் வண்டு
[சிலிர்த்தது,
தண்டை தூங்கும் உன் தாளிணை
[கண்டது."



ஃ



வேறு

மங்க ளன்தரும் காதை மாந்திய
மங்கை ஆவி வெருண்டு போய்
"கங்குல் எங்கிலும் •ருத்ர நாட்டியக்
கச்சை ஓங்கி ஒலிக்கையில்,
சங்கை விட்டுயிர் பந்தயம் எனச்
சன்ம முற்றும் விலக்கி உன்
அங்கை உள்ள இத்தேனைத் துய்த்திட
அல்லலுற்றனே" என்ற பின்,

"துள்ளும் நெஞ்சொடு கள்ள அந்தியின்
ஏமம் தோண்ட உலாவையில்
வெள்ளை மாடமும் அந்தி போதையும்
அன்றி வேறெதும் காண்கிலேன்.
வெள்ளித் தாம்பென வாய்த்த கட்டுரை
வீணில் இங்கு விரிப்பதேன் ?
மெள்ள நீள் மழை துள்ளி ஒய்ந்தது;
மெய்யனே! அதைக் காட்டுவாய்."

என்று சொன்னபின் தீப சோதியில்
ஏமு தப்படி தாண்டுமுன்
தொன்று தொட்டவள் மச்சை ஏந்திடும்
தோதகத்தியின் விட்டத்தில்
சென்ற சீவனும் நின்ற கண்களும்
கொண்ட கட்செவி தொங்கவே
நன்று நன்றென வாய் பிளந்தவள்
நைந்து பின்னரும் சொல்லுவாள்:

"தாம்பென் றெண்ணிய ஆலம் தப்பிய
பாக்கி யம்சொல வாயெது ?
பாம்பு கொன்றிடல் இன்றிப் பாம்பினை
மாய்த்த காட்சியைப் பார்க்கையில்
ஓம்பும் காதலில் உள்ள சக்தியை
உள்ளம் எண்ணி வியக்குது !
ஆம்பல் என்ன இராவில் பூத்திடும்
ஆசை கேட்குது, சொல்வையோ ?



அறையைச் சேர்ந்திட அன்பு காட்டிய
அற்புதத்தினை வாழ்த்துறேன்.
நிறைய நீர்ப்பெருக் கோடும்
[ஆற்றினைத்
தாண்ட நேர்ந்த மிதப்பதோ ?
மறையும் அந்தி மயங்கும் வேளையில்
மங்கை மாரொடு சென்றவள்
துறையில் எவ்வித தெப்பக் கட்டையும்
தூங்கக் காண்கிலம், காட்டென..."

மேகம் குன்றிய வானின் வெண்குள
மீன்கள் ஒன்றிரண் டாடவும்,
சோகம் தூங்கிய ஆற்றின் பாதையில்
சூழும் மின்மினி பூக்கவும்,
தாகம் குன்றிய தாவரங்கள் வாய்ச்
சாரல் சொட்டி ஒலிக்கவும்,
மோகம் ஏறிய மாதுமுன் விளக்
கூர மோனமாய்ச் சென்றனர்.



மங்க ளன்செல மாதின் பின்புறம்
மாய ஆற்றினைச் சார்ந்ததும்,
திங்களன் எழும் தேசு காட்டிடத்
தெப்பத்தை அவர் தேடலும்,
வங்கு கண்ணொடு கோண வாயொடு
வாசி இன்றிய மெய்யினைத்
தங்கும் கட்டைஎன் றோர்ந்த காதலி
தண்ணில் உப்பென ஆயினள்.

கொட்டும் பூகம்பம் தொட்ட பூமியில்
கூற்றுவன் படை காண்ப போல்,
வெட்டும் வாளென வீழும் வானமின்
வீச்சில் விந்தைகள் காண்ப போல்,
மட்டி ஒருயர் ஞானப் பாலுண
வேறு மாட்சி அலர்வ போல்,
ஒட்டும் அன்பினள் நெஞ்சம் வேறுல
கோடி, ஓடி விரிந்ததே!

வேண்டும் தேனிசை வாரி வீசிடும்
வேனில் கோகிலம் போன்றவள்
மீண்டும் பாதையில் சென்ற போதிலும்
வேறு பெண்ணென ஆனதை,
நீண்ட நெட்டுயிர்ப் போடு காதலன்
நெஞ்சில் எண்ணி வியப்புடன்
தாண்டும் காலடி நீழ லோடொரு
சாயை என்றிட ஊர்ந்தனன்.

கூட்டும் வீணையில் ஓசை இன்றிய
 கோலமானதன் காதலி
வீட்டை உற்றபின் மெத்தை ஏறியும்
 வாயசைக்க மறுத்திட,
காட்டின் மைமரக் கூட்டுக் கோழிகள்
 கூவி மோனம் துளைப்பபோல்,
வாட்டம் ஏறிய நண்பன் நங்கையின்
 வாட்டம் சென்றிடச் சொல்லுவான்:

" நள்ளிருள் இடை நேயன் நானுனை
 நாடும் நீர்ச்சுனை மாவெனக்
கள்ளம் இன்றிய காதல் உந்திடக்
 காலன் நாண அடைகினும்,
வெள்ளம் தேக்கிட ஊமை மண்ணினை
 வீசி வெல்ல நினைப்பதேன் ?
உள்ளத் தாசையின் வானம்பாடியை
 ஊமைக் கூட்டில் அடைப்பதேன் ?"

வேறு

" இரவெழுந்தது, ஒளி விழுந்தது,
 எழுமதியமும் காணேன் !
பொறை உடைந்தது, புயலெழுந்தது,
 புகலிடம் உனைக் காணேன் !
சிறைஉறும் மையல் கனல் உமிழ்
 உடனெழுந்தது மார்பில். [சினம்
திரை மறைவினில் உயிருணர் வினைத்
 தினும் கொடுமையைக் கண்டேன்.





வெகுண்டதும் மனம் அறைக்கதவினை
மிகுந்துயருடன் சாத்திப்
புகுந்துயில் உறத் தரை விரிப்பிடை
புலனடங்கவும் வீழ்ந்தேன்.
தகும்தகும் எனக் கரமெழுப்பவும்
தளர்ந்தனவிழி சற்றே,
நகுஞ்சுடரினை மழை நனைத்திடும்
நதிஎன உனைக் கண்டேன்.

கடந்திடச் சுவர் கயிறென ஒரு
கரும் அரவினைக் கொண்டாய்,
அடைந்திடக் கரை பிண உடலினை
அணி மிதப்பெனச் செய்தாய்;
படைத்தவன் எனும் பழம் சிவன்பல
பணி அரவணி ஏற்றான்,
கடைப்பொருள்எனும் கனல்சிவன்பல
பிண உடல் அமர்ந் தார்ப்பான்.

இனி உனதெழில் மடமயிலென
இருந்திடல் வெகு பாவம்!
முனி எனமுழு நினைவுடன் எனை
முதற்பொருள் எனப்போற்றி,
கனிவுடன்வரும் கடும்உறுதியைக்
கடும்புயல்இடை காண
தனிவிழிச்சிவன் உமிழ்ந்திடும் கனல்
தழுவிட மயல் அற்றேன்."

வேறு

மங்கையின் மொழியைக் கேட்ட
மங்களன் காதல் வெந்து
தங்கிய நீற்றைப் போலத்
தவளமாய் மாறக் கண்டான்.
பொங்கிசைக் கீதம் ஒன்றும்
புரண்டெழும் துரியம் ஒன்றும்
பங்கயம் போல நெஞ்சில்
பரவிடும் விந்தை கண்டான்.



விழிதுயில் அறையைச் சூழ
வெளிஇடை வேட்டை ஆடும்
எழில்மதி இருட்டை உண்டு
இளைப்புடன் நிழலில் ஆற,
நழுவிடும் ஆற்றின் போக்கு
நரர்களின் இலக்கைக் காட்ட,
கழிந்தது கங்குல் முற்றும்
கணம் எனத் துள்ளி ஓடி.

கழிந்தது இரவின் மாயம்,
கமழ்ந்தது காலை ரோஜா.
பொழிந்தன சோலைப் புட்கள்
புது ரவிக் கேற்ற வாழ்த்து.
சுழிந்தது மனிதக் கும்பல்
சுமைகளோ டாற்றைத் தாண்ட,
எழுந்தது பரிசல் ஓட
எழுந்தது ஓடப் பாட்டு.



எழுந்ததும் ஓடப் பாட்டு
இனித்ததும் ரவியின் கீதம்
அழுந்திய துரியம் நீங்கி
அன்பனும் சகஜம் பெற்று,
"விழுந்தவன் எழுந்துவிட்டேன்,
வீழ்ந்திடும் அழிஞ்சி போல.
ஒழிந்தது பண்டைச் சென்மம்
உயர்ந்தனன் விண்ணில்" என்றான்.

பெய்மழை யோடி ராவில்
பேதமை ஓடக் கண்ட
மெய்மகள் தெய்வப் பித்தில்
மிதந்திடும் அவனைப் போற்றி
கொய்மலர் தூவித் தாளில்
குழைந்தனள் கண்ணீர் ஆட,
துய்யனும் தூய்மை கண்டான்,
தோகையைக் காணவில்லை.

மங்கையும் மங்கக் கண்முன்
வானொளி சூழும் பாரில்
சங்கையில் சோலைவாய்கள்
சௌந்தரப் பண்கள் கூட்ட,
கங்கையின் ஆற்றிற் கப்பால்
கண்டனன் மாயத் தோற்றம்,
பொங்கிசை முரளி ஒன்றின்
போதை வந்தீர்க்கக் கண்டான்.



நாற்சுவர் கூடு விட்டு
நல்லிசைப் பாதை நோக்கி
வேர்ப்பலா வீசும் வாசம்
வாங்கிய பறவை போல
ஆற்றினை அன்பன் சார,
அக்கரை சேர்க்கும் தோணி
காற்றினில் கண்ணன் பாட்டுக்
கடைவுகள் பயிலக் கண்டான்.

கண்ணனின் வேட்கை நெஞ்சில்
காணரும் தீயைப் பாய்ச்ச
தண்ணியல் நாமம் மாற்றுச்
சாதனை ஆகத் தோன்ற
புண்ணியன் பரிசல் ஏறிப்
போனதைக் கண்ட தாசி
கண்ணிமை ஆடா நிற்க
காதலை வாழ்த்தி நின்றாள்.

---



# போரியல்

காட்டில் மேயும் கலைமான் ஒன்றை
வேட்டை ஆடும் வேகம் இல்லா
பல்லுப் போன வேங்கை பார்த்துக்
கொல்லக் கோரி குத்திரம் எண்ணி,
மூங்கில் கொத்தில் முட்டி மறைந்து,
தூங்கும் புதரின் தோளில் ஏறும்.
எண்ணும் எண்ணும் ஏய்க்கும் வகையை,
கண்ணை மூடும் கனவுகள் காணும்.
அவ்விதம் எண்ணி, அண்ணன்
[திருவை
வவ்வி வளைக்கக் காய்கள் ஆடிய
துரியோ தனனும் தொடர் விளைவாக,
விரிவாய் அரவாய் வீழ்த்திய போரில்
குத்துப் பட்டுக் குளத்தங் கரையில்,
அத்தி மரத்தை அடுத்த குகையில்
கண்ணை மூடிக் கர்வம் ஒழிந்து,
விண்ணைச் சேர விழையும் போதில்
சிந்திய பாலைச் சேர்த்திட எண்ணும்
குந்திய நோக்கம் கொண்டவன்
[ஆவான்,
மிஞ்சிய படையின் மின்னும் வீரன்,
வெஞ்சின அசுவத் தாமனும் ஆவான்,
அரவக் கொடியோன் அள்ளைத் தூண்ட
நரவச் சொல்லை நவிலல் உற்றான்.



"எந்தன் தந்தை என்னும் உறவால்
வந்த வெறுப்பென் றெண்ணிட
[வேண்டாம்.



போரின் கலையில் பேரா சிரியர்!
வீறில் மிகுந்த வித்தகர்! சூரவர்!
மாற்றலர் பல்லோர் மண்ணாய்ப் போக
நாற்படைக் கெல்லாம் நாயகனானோர்!
இவரை நேரில் வென்றிட இயலா
அவரைக் காயர் அல்வழி யாகப்
பின்னால் வந்து பிடரியில் வெட்டி,
முன்னால் வந்து முடிதலை தூக்கி,
உன்றன் தேரின் உதட்டில் வீசிய
பன்றிச் செய்கை பார்த்ததும்
[உண்டா?
பதைக்குது நெஞ்சம், பற்றுது வயிறு.
வதைக்குது மானம், வாடுதல் நன்றா?
கௌரவர் சேனைக் கௌரவம் எங்கே?
உன்னுயிர் சென்றால் உலகம்
[இலதோ?
பொன்னெனப் போற்றும் மானம்
[இலதோ?
போரில் இறங்கில் போக்கி
[ரண்டுண்டு.
சேரில் சொர்க்கம் அல்லது வெற்றி!
மன்னன் பின்னே மற்றவர் செல்வர்.
கன்னல் போரே! கனியிதழ் இரும்பே!
அலையும் மனத்தில் ஆணி அடிப்பாய்,
குலையும் படையைக் கூட்டி
[அழைப்பாய்.
துரோணன் பிள்ளைத் துள்ளும்
[வரையில்

குரோதம் உண்டு. கூசாது எனக்குத்
தங்கிய படையின் தலைமை தந்தால்
பொங்கிடும் வெற்றிப் பூர்ணிமை
[தருவேன்.
பாண்டவர் செருக்கும் பாதகர்
[உடலும்,
மாண்டிடச் செய்வேன், மதிமேல்
[ஆணை!''

கசையடி என்னக் கனலும் மொழிகள்
அசைவுறும் நெஞ்சோ டாங்கு கிடந்த
அரவக் கொடியோன் அங்கத் தேற,
மறைய இருக்கும் மங்கிய தணலொன்
றெழிலைக் காற்றில் எய்துதல் போல,
விழியை விரித்தான், கனவுகள்
[கண்டான்.

"மீட்டிடு வெற்றி, வீட்டிடு அவரை,
நீட்டிடும் தலையை வெட்டி நிமிர்த்து.
எந்தன் முன்னர் இவர்தலை கொண்டா.
வந்தனை செய்துவிண் ஏகுவன்''
[என்றான்.

ஆணை பெற்றதும் அஸ்வத் தாமன்
காணுப் படையைக் கண்டு கலந்து
துஞ்சும் உடலில் தூங்கும் வீறை
அஞ்சும் வகையில் அனலாய் ஆக்கப்
படையின் இருப்பைப் பார்க்கச்
[சென்றான்.





"மடையர் மயக்கம் தீரும் நீவிர்
என்னுடைத் தலைமை ஏற்கில், நாளை
வந்திடும் வெற்றி வஞ்சனை கிழியும்.
தந்தனன் தலைமை தம்முளம் என்ன?"
என்றலும், 'நன்று' என்றனர் வீரர்.

அப்பொழு தெங்கும் அப்பும் காரிருள்!
தப்பிடத் தத்தித் தாவும் தாரகை!...
படைகளை விட்டுப் பாதையைப் பற்றித்
திடமுடன் திட்டம் தீட்டிக் கொண்டு
திரும்பினன் அசுவத் தாமன் தெளி
[வாய்.
நெருங்கிய ஆலொன் றங்கே நின்றது.
'வாவா' என்று வற்புறுத்தியதால்
போவோம் என்று புதைந்தான்
[அடியில்.
நரியின் ஊளை நாற்புறம் ஏறும்,
எரியும் கண்கள் இலையிடை மின்னும்,
எங்கோ அழுகை எழுவது போல
வெங்கோட் டானென் றய்யோ
[என்னும்.
சருகுகள் காற்றில் சர்ரென ஓடும்.
'கறகக' என்று தவளை கத்தும்.
வெளியின் சல்லடை விழிகளின்
[ஊடே
ஒளிரும் பல்மர மின்மினி வெளிச்சம்.
எட்ட விழுந்தும் போரில் எமன்கை
பட்ட பிணங்கள் பாய்ச்சும் நாற்றம்.



நில்லென அமைதி நிலவிடும் போது
சில்வண் டினங்கள் சீயெனக் கூவும்...
தெளிந்த நெஞ்சம் தென்பை இழக்க
வழிந்த சோர்வின் வயப்பட் டவனாய்
வேரின் மீது பிடரியை வைத்தான்.
மாறிய வானை மதிப்பிடலானான்.
ஆல மரத்தின் அழகிய கிளையில்
நீலச் சாடியை நிகர்த்த காகம்
உறங்கும் ஓவிய வரிசையொன்
[றிடையில்
பிறந்தது. உடனே தானதில்
[பிணைந்தான்...
பறக்கும் ஓசைப் பட்டதும் மலைக்க,
மரத்தில் ஓர் உரு மறையக் கண்டான்.
வந்தது வாயில் காக்கை ஒன்றைப்
பந்தெனக் கவ்விப் பறக்கக் கண்டான்.
யாதாம் உருவம் இவ்விதம் செய்ய ?
'வாதா மரத்தின் வௌவால்
[இதுவோ?'
என்றவன் எண்ணி இருக்கும்
[போதில்
சென்றது மீண்டது, பல்முறை
[சென்றது.
சிவனே என்று தூங்கும் வரிசைக்
கவமாய் வாய்த்தது. ஏழை ஒழிந்தது.
கங்குல் என்னும் காலக் குகையில்
தங்கித் தனிவழி காணும் பொட்டை!
காரிருள் என்னும் கருமா ளிகையின்



வாரிசாக வாழும் கோட்டான்!
என்னும் உண்மை இதயத் துள்ளே
மின்னல் ஓட்டவும் வீரன் எழுந்தான்.
வீரர் தூங்கும் விடுதிக் கேகி,
சூரன் கிருபனின்; சீழுத்தியை விலக்கி,
அருகில் இருந்த அறிஞன் கிருத
வருமனை எழுப்பி மீண்டங் குற்ற
காரணம் இயம்பினன். காரி
[உமிழ்ந்தார்.
"ஆரணம் கற்றும் ஆற்றலைப்
[படைத்தும்
தர்மப் போரின் தன்மையை மறந்து,
வர்மம் பூண்ட வஞ்சனைப் புலியாய்க்
கவ்விக் கொல்லல் கௌரவர்க்
கழகோ ?
செவ்விச் சமரின் சிறப்பிதில்
[உண்டோ?"
என்றடுக் காகப் பேசினர், எதிர்த்தார்.
நின்று நிறுத்து நீதியை உணரும்
மன்றின் நிலையா அக்கால் மலரும்?
பந்தெனத் தந்தை தலைபறந் தோடிய
நொந்தபுண் ஆற்ற நூலால்ஆமோ!...

தன்னந் தனியே தோழரை விட்டு
மின்னல் எனவே மிகுமிருள் பிளந்து
பாண்டவர் படமெனும் பட்டப் பாலகர்,
பாண்டவர் சேனைகள், பாஞ்சாலத்தார்,

அன்னவர் வெற்றிகட் களித்திட
[ஆறுதல்
வந்தபொன் மனைவியர், வண்டெனும்
[தாதியர்
தங்கிடும் விடுதியைத் தக்கணம்
[அடைந்தான்.
சங்கடம் செய்திடச் சூழுமோர் அகழி
கடந்திடப் பாலம் காத்திட அதனை
நடந்திடும் நல்லவாள் பாரா இல்லை.
குறித்ததும் நெஞ்சிடைக் குமிழி
[பிறந்தது;
பருத்திப் புடவையாய்ப் பழுத்ததென்
[றெண்ணினன்.
பாண்டவர் ஐவரும் பயமற்றுறங்குரூர்
காண்டிவம் துயிலுதென் றுள்ளம்
[களித்தான்.



உண்மையை ஊகித் தறிந்திடல்
[ஆகுமோ?
அண்மையில் கௌரவர் ஆறவென்
[ரோரிடம்
அமைத்திருந் தாரதில் எவருமே
[இல்லை.
குமைந்திடும் தோல்வியைக்
[கொண்டதும், படையெலாம்
கல்லினைக் கண்டதும் பறக்கும்
[காக்கையாய்



பல்விதம் போயினர். பாசறை
[மிருந்தது.
வெற்றியைப் பெற்றதும் விடுதியை
[நோக்கிச்
சுற்றிய தலையுடன் சோகமாய்ப்
[பாண்டவர்
வருகையில் வெற்றிட வசதியைக்
[கண்டதும்
குறுகினர், மறுகணம் குறட்டையோ
[டுறங்கினர்
அவ்விதம் உண்மை இருந்திட ஐவரும்
இவ்விடம் துயிலுவர் எனநினைத்
[தாசையால்
புகுந்தனன் துரோணர் போற்றிய
[புதல்வன்.
மிகுந்தமென் பட்டுகள் மிளிர்ந்திடும்
[கட்டிலில்
திருட்டத் துய்மன் திடமாய்த்
[தூங்கினான்.
இருட்டை எரிக்கும் விளக்கொன்
[றிருந்தது.
கட்டிலில் உறங்கும் கட்டிளங் குமரனை
எட்டிய உதையினால் எழுப்பினான்,
[எண்ணுமுன்
அரசிளங் குமரன் அதிர்ந்தெழுந்
[தாரது
இரவினில் கத்தியோ டிவ்விடம்
[வந்ததென்

றியம்புமுன் அவன்தலை இருட்டில்
[உருண்டது.
மயங்கிய மோனம் மாறிப் போக
கலவரம் கண்டது. காரிகை யாவரும்
அலமலந் தோடினர். ஆட்களோ
[தாவினர்.
தயங்கிய இருளில் தம்பகை காணு
தியங்கினர் கைகளில் சிக்கிய
[எஃகுடன்.
ஒருவரை ஒருவர் குத்திச் சாய்க்கவும்
மறுமுறை மரணத் தாண்டவம்
[ஒலித்தது.
சாக்குரல், அடி உதை சத்தம் மிகுந்து
தாக்கவும், பாண்டவர் தனயர் எழுந்து
தத்தம் வாளைத் தாவிப் பிடித்து
சத்தம் வந்த திக்கை நோக்கி
பாய்ந்தனர் இருளில் பாம்பின்
[வாய்க்குள்
மேய்ந்திடும் எலிகள் மிஞ்சிய
[கதையாய்.
வஞ்சனைக் கோட்டான் வாளால்
[அவரை
செந் நிறம் ஆக்கினான், சிரத்தைக்
[கொய்தான்.



கீரைத் தண்டைக் கிள்ளிக் கட்டிய
சோரன் போலக் கொய்தலையோடு
ஒட்டம் பிடித்து, உடன் பரி ஏறினான்.



வாட்டம் தணிந்த வகையில் புறத்தே
கிருபனும் கிருத வருமனும் கூட்டமாய்
குறுகிய பாலத் தடியில் குந்தி,
தப்பிட ஓடும் தாதரைக் கொன்று
குமபலாய்க் குவிக்கும் காட்சியைக்
[கண்டான்.
அத்தருணத்தில் ஐவரின் படையொன்
றித்திசை நோக்கி எரியுடன்
[சாய்வதை
கண்டதும் அசுவத் தாமனும் தோழரும்
வண்டெனப் பறந்தார் வல்லமை காட்டி.

வாவிக் கரையில் வாங்கும் மூச்சோ
டாவி இழக்கும் அரவக் கொடியோன்
கண்ணை மூடி கட்டை என்ன
விண்ணைக்கூட விழையும் வேளை!
வந்தேன் என்றான் வஞ்சனைக்
[கோட்டான்.
தந்தேன் என்றான் பாண்டவர் தலையை.
சாகும் பொழுது சிறுகஸ்தூரி
ஏகும் உயிருக் கேற்றம் தரல்போல்
தொங்கும் வாயன் துள்ளி எழுந்து
எங்கென் றகலக் கையை இணைத்தான்.
மங்கும் கண்ணை மலரச் செய்து
பொங்கும குரலில் போற்றி மகிழ்ந்தான்.
“பாண்டவர் தலையா? பாலை வார்த்தாய்.
வேண்டிய திதுவே விண்ணே
[வேண்டாம்.

வீமன் தலையை வீசென் கையில்,
நேமம் தீரும் நிம்மதி ஆகும்"
என்று தன் அந்தி விருப்பம் இயம்ப
நன்றெனத் தலையை நீட்டினன்,
[பெற்றான்.
மோட்டில் மேயும் நாட்டெலி ஒன்றை
வேட்டை ஆடிய வீட்டின் வேங்கை
உண்ணு தெதிரே வைக்கும்,
[உவக்கும்.
கண்ணால் பார்க்கும், காலால் தள்ளும்.
தப்படி போடும், தாவிப் பாயும்.
அப்படி இப்படி அசைக்கும், உறுமும்,
என்பது போல இவனும் செய்தான்.



"ஒன்பது நாளாய் உறுமிய வீரா!
உன் வாய் ஈதா? உதிரம் அங்கேன்?
செந்நாய் விழியின் செருக்கும் எங்கே?
இதுவா உன்சிரம்? எழிலுடல் எங்கே,
மெதுவாய்த் தொட்டு மேனி சிலிர்க்க?''
என்றொரு சிறிய எக்களிப் போடு
தன்னிரு கையால் தலையை
[நெறித்தான்.
காலடிக் கீழே நொறுங்கும் காயைப்
போலது துகளாய்ப் போனதும்
[சிரித்தான்.
"உன்தலை அன்று. உன் தலை அன்று.
பந்தலைப் பருவதம் என்றார் சொல்வர்?
அந்திஇங் கூர்ந்ததென் றசுவத்தாமா!
தந்திரத் தாலெனைத் தாக்கினை! தகுமா?



தருமம் விட்டனை! தருமரை விட்டனை!
வருமம் எண்ணினை! வாதும் சூதும்
அறியாச் சந்திர குலத்தின்
[அகல்களை
கரியாய்ச் செய்தனை, கயவன் ஆனாய்!
வெறியில் வீணாய் வைரிகள் ஆகா
சிறுவர் சிரத்தைச் சீவிக் கொணர்ந்
[தாய்
திரியும் வேங்கை வீமனின் சிரமென
சிறிய வாரிசுச் சிட்டினைக் கொணர்ந்
[தாய்.
துரோணரின் மகனா? துரோகியா?
[சமரெனில்
குரோதமும் பொய்மையும் குரவராய்
[நெஞ்சிடை
அரசிருந் தறத்தினை அழித்திடும்
[உண்மையை
முரசடித் தியம்ப முளைத்தவோர்
[மூங்கையா?
முறித்தனை அறக்கிளை, முடித்தனை.
[என்னுயிர்,
எரித்திடும் பகலவன் ஏறுமுன் ஏகிடு...
மண்ணை வேண்டினேன். வாய்த்தது''
[என்று
கண்ணைத் திருப்பக் கண்ணொளி
[சென்றது......
விண்ணொளிக் குமரன் வேலை எடுத்து
மண்ணொளி ஏற மார்க்கம் வரைந்
[தான்.

# குமாஸ்தா பாட்டு

குற்றம் எதுவும் நானறியேன்,
குந்தும் சிறையை நானறியேன்,
ஒற்றர் எவரும் நானறியேன்,
ஒண்டிப் பயந்து நானறியேன்.
பற்றும் இருட்டுக் கொட்டடியில்
பலநாள் வாழ்ந்தும் சோர்வடையா
வெற்றி வினைஞன் நானன்றே!
வீரச் சிங்கம் நானன்றே!

அண்டப் பொருளோ டொண்டியநான்
அணுவோ டணுவாய்ப் பாடியநான்
துண்டம் எனவே எப்படியோ
துள்ளிப் பிரிந்து கீழ்நோக்கி
பிண்டத் திடையே ஓர்கருவாய்,
பிரும்மன் சிறையில் ஓர்உயிராய்
ஒண்ட விதித்த தீர்ப்பெதுவோ?
ஓராக் குற்றம் யாரறிவார்?

அன்னை வயிற்றில் சிறையுண்டேன்;
அருணன் மதியம் அங்கேது?
பின்னர் உடம்பின் விலங்கிட்டார்,
பெரிய நாளக் கட்டிட்டார்.
தின்ன எனக்குத் தென்பில்லை;
திணிக்க அன்னை முற்பட்டு
சின்ன உயிரின் காவலனாய்
சிறந்த கொடுமை செயலுற்றாள்.





சிறையை விடுத்து வெளிஏறி
சிதைந்து சென்ற முன்வாழ்வை
நிறைய நினைக்கும் கைம்மகவாம்
நிலையில் நாட்கள் வாடியபின்
குறையை விலக்க வழிதேடிக்
குமரன் யாக்கை கைக் கொண்டு
புறையை ஒழிக்க முயலுகையில்
"பள்ளி நுழைந்து பார்" என்றார்.

பாடம், கணக்கு, மணிஎன்றார்,
பண்டை நிலையின் சுகமேது?
ஆடல் பாடல் விழைந்திடிலோ
அஞ்சு பணத்தைக் கொடுப்பவரார்?
நாடி தளர்ந்து 'டீ' உண்டு
நல்ல பரிசை தேர்ந்திடவே
ஏடு துளைத்தேன் ஐயங்கண்டேன்,
நரிக்கொம் பேதும் சிக்கவில்லை.

பெற்றோர் விடுத்த பெருமூச்சில்
பெரியோர் அவிழ்த்த சிறுபேச்சில்
கற்றேன் அவர்கள் நெஞ்செரிவை;
கரத்தை நீட்டிப் பெணகொண்டேன்.
உற்றார், நண்பர், ஊராரும்
உவகை பூக்க, நான்மட்டும்
மற்றோர் சிறையும் கால்கட்டும்
மயக்க மருந்தும் ஏன்?" என்றேன்.

இல்லம் நடத்தி அதனூடே
இன்பம் சுயேச்சை நான்தேட,
அல்லும் பகலும் பணமென்னும்
அரவம் என்னைச் சூழ்ந்திடவும்,
தில்லும் மல்லும் திரிசமனும்
திணிந்த உத்யோகத் துறையில்
மெல்லப் புகுந்து வேர்தேடி,
மேலும் மேலும் துயருற்றேன்.



வஞ்சம், வெகுளி, மனத்தாங்கல்
வறியன் செய்கைக் கவமானம்,
லஞ்சம், சிறுமை, குருட்டெண்ணம்,
லாபம் தனக்கு, மற்றோரைக்
கஞ்சத் தனமாய் நடப்பித்தல்
இவையே கண்டேன், மற்றபடி
கொஞ்சங் கூடநெறி நிற்போர்க்
கடைவாய்ச் செய்கைக் குறியறி
[யேன்.

மனமும் வாயும் ஒவ்வாதோர்
மறதிப் பேயைக் கூப்பிடுவோர்,
குணமும் குறியும் ஒவ்வாதோர்
குன்றின் தொடராய் முன்னெழுவார்.
சினமும் மூளில், யார்மீது
சீறிப் பாய? பயனேது?
தினமும் வாழ்வின் சிறைஎன்னைத்
தின்று கொழுக்கும், கண்ணுறு
[வேன்.



சிறையைத் தவிர்க்க வகை அறியேன்.
சிறுத்துச் சும்மா வாழுங்கால்.
" இறைவன் என்ப தோர்கனவு,
ஈயார் பிறரை ஏமாற்ற.
குறையை ஒழிக்க வழிஒன்றே
கூசாப் புரட்சி " எனறுபலர்
இரவில் பாடும் தவளைகள்போல்
இசைக்கும் ஓசை செவியுற்றேன்.

பொழுது படுக்கும் எல்லைவரைப்
புதைந்து சேற்றில் உழைப்போரும்,
பழுது விழுந்த பாதைகளில்
பரப்பக் கற்கள் உடைப்போரும்,
தொழுது மிரட்டிப் பிச்சை எனும்
தொழிலில் நாட்கள் கழிப்போரும்,
அழுது தவிக்கும் கைதிகளாய்
அவியக் கண்டேன், அனல்
[தொட்டேன்.

குந்தக் குடிசை இல்லாதோர்,
கூலிக் குழைத்தும், காசற்றோர்,
அந்தி மயக்கில் திரும்புங்கால்,
ஆடல் பாடல் மேடைகளை,
பந்தி விளக்கை, பந்தடியை,
பணக்காரர்கள் பொய்ப் பேச்சை
சந்தி சிரிக்க ஏசுவதும்
கண்டு சலித்தேன், கல்லானேன்.



நாட்டில் நகரில் உலகெங்கும்
  நன்மை காணார் கண்டபடி
வீட்டிக் கட்டுப் பாடுகளை
  வீழ்த்த முனைந்து குமுறுவதும்,
வீட்டில் வளரும் பணக்காரர்
  விமலன் அருளைப் போற்றுவதும்,
கூட்டில் உருகும் கிளியாக்கிக்
  குன்றச் செய்த; நெஞ்சுடைந்தேன்.

"உடலைக் கடந்த உயிருண்டோ ?
  உயிரைக் கடந்த ஒன்றுண்டோ ?
மடலைக் கடந்த மணமுண்டோ ?
  மனத்தைத் திருப்பும் மதி உண்டோ?
விடைசொல், மனமே இவைகட்"கென்
  றிடித்துக் கேட்க விண்ணின்று
தடையற் றொலிக்கும் தாரைபோல்
  தாமாய் எழுந்த இம்மொழிகள்:

"கருப்பை விட்டு வெளி ஏறக்
  கடுமை மிகுந்த வலி உண்டேல்
நெருப்பை நெஞ்சில் எழவைக்கும்
  வறுமை நீங்க வழி இலையோ?
அருங்கைச் செல்வி மண்ணன்னை
  அவனிக் கீயும் எண்திருவை
விரும்பும் வகையில் பொதுவாகப்
  பகிரா விட்டால் விடிவேது?''

# வந்த வழி

மன்மதனுக்கு அங்கஜன் (அங்கத்தை உடையவன்) என்ற பெயருண்டு; அவனுக்கே அனங்கன் (அங்கமில்லாதவன்) என்ற பெயரும் உண்டு. அங்கன் அனங்கனன கதையைத்தான் புராணங்கள் கூறுகின்றன. ஆனால், நான் எந்தப் புராணத்தையோ அக்கதையைச் சித்தரிக்கும் காவியத்தையோ படித்ததில்லை.

இவ்வார்த்தைகள் நான் சிறுவனாக இருந்தபோது காதில் விழுந்தவை. மாசி மாதத்து வளர் பிறையில் பிள்ளையார் கோவிலுக்கு எதிரில் சிறு பந்தலிட்டிருப்பார்கள். எதிரே கொட்டை முத்துச் செடியையும் கரும்பையும் நட்டு ஒரு விறட்டியையும் அதில் கட்டியிருப்பார்கள். இரவு ஊர் அடங்கிய பிறகு, ஒன்பது மணிக்குமேல் எண்டிசையும் கொண்டாடும் காமன் பண்டிகையைத் தடுக்கப்போமா என்று டேப் ஒலியுடன் சாரீர வசதி படைத்தவரும் படைக்காதவரும் கூடிக்கொண்டு, நிலமதிர பெண்டு பிள்ளைகள் சூழ பத்துநாள் காமன் கதையைப் படிப்பார்கள். மாசிமாத பௌர்ணமி அன்று காமதகனம். ரதி மன்மதன் வேஷம் போட்டவர்கள் பாட்டும் கூத்துமாக மக்கள் புடைசூழ தெருக்களில் வந்த பின்னர் காமதகனம் நடைபெறும். பின்னர் ஒப்பாரிப்படலம். இரவு கழிந்து விடும். காலைக் கருக்கிருட்டில் ஒப்பாரியும் பிணக்கொட்டுமாக மன்மதனின்றி பண்டிகையில் பங்கெடுத்துக் கொண்டவர்கள் ரதியுடன் ஆற்றுக்குச்

சென்று தலை முழுகி வீட்டுக்குத் திருப்பி காலைக் கழுவிக் கொள் வார்கள். நன்றாக விடிந்து விடும். அன்று பால் தெளிப்பு. மண் லிங்கமொன்றை காமன் எரிந்த இடத்தில் செய்து வைப் பார்கள். காமன் சமாதி! மூன்றாம் நாள் மண்லிங்கம் இருக்காது. பப்பாளிச் செடி பச்சையாக நடப்பட்டிருக்கும். சிவனார் தன் திரு மணத்தின் போது அங்கனே அனங்கனாகி உயிர்ப்பிச்சை அளித் ததைக் காட்டும் காட்சி. சில நாட்கள் கழித்து பெருத்த கோலா கலத்துடன் எரிந்த கட்சி, எரியாத கட்சித் தர்க்கப் பாடல், ரதி மன்மதன் தேர் ஊர்வலம் ஆகியவற்றுடன் பண்டிகை முடி வடையும்.

நான் சிறு பையனானதால் விழித்துக் கொண்டிருக்கும் பொழுது பிள்ளையார் கோயிலுக்குப் போய் லாவணியையும், தர்க்கத்தையும் தொகையறுவையும் கேட்டுக் கொண்டிருப்பேன். தப்பித்தவறி தூங்கிவிட்ட நாட்களில் பாதி இரவில் 'டடட்ட்டடா' என்ற பறை ஒலி கேட்டு திடுக்கிட்டு விழித்துக் கொள்வேன். வீட்டார் அறியாமல் வாசல் கதவைத் திறந்து மூடிக்கொண்டு பிள்ளையார் கோயிலுக்குப் போய்விட்டுத் திரும்பி வந்து படுத்துக் கொள்வேன். வருஷம் தவறாமல் பல வருஷங்கள் பார்த்த தழும்பு மனத்தில் தடித்துக் கிடந்தது. கிடக்கிறது.

வயதாகி சிந்தனைவிழி திறந்த பிறகு காமதகனம் வெறும் கதையன்று; பரிணாம இயக்கத்தின் உருவகம் என்ற எண்ணம் எழுந்தது. பழங்குடி மக்களைப் பற்றிய வரலாறுகளைப் படித்த போது அவர்களுக்குப் பாலுணர்ச்சி குறைவென்று அறிந்து கொண்டேன். ஆண் பெண் எதிருக்கெதிராக இருந்தபோது கூட உடலையே பொறுத்த இப்பாலுணர்ச்சியை நீண்ட நேர நாட்டியம் கூத்துக்குப் பிறகுதான் விழிப்படையச் செய்யமுடியும்

என்றொரு செய்தியை அறிந்தேன். பழங்குடி மக்கள் பாலுணர்ச்சியையும் நாகரிகத்தில் உயர்ந்த நம்முடைய பாலுணர்ச்சியையும் ஒப்பிட்டுப் பார்த்தபோது இடையில் பெரிய மடுவைக் கண்டேன். பழங்குடி மக்கள் ஜனத் தொகை பெருகவில்லை. நாமோ குடும்பக் கட்டுப்பாடு கட்டத்துக்கு வந்து விட்டோம். இந்த மாற்றத்துக்குக் காரணம் என்ன? பரிணாமப் போக்கில் உடலைப் பொறுத்திருந்த பாலுணர்ச்சி மனத்தைப் பொறுத்த மர்மமாக மாறியதுதான் காரணம் என்று தோன்றிற்று. அங்கன் அனங்கன் ஆனதின் பொருள் ஒருவாறு விளங்கிற்று.

மனம் சிவலிங்கத்தைப் போல உருவமுள்ளதென்றும் சொல்ல முடியாது, அற்றதென்றும் சொல்லமுடியாது; மனத்தை அனங்கன் என்று பாவிக்கலாமா? அப்பொழுதும் அனங்கன் என்ற சொல்லுக்குள்ள முழுப்பொருளும் பொருந்தாதே என்ற தடுமாற்றம் ஏற்பட்டபொழுது மண்ணும் விண்ணும் மற்றய இரட்டைகளாய் விளங்கும் இந்த அண்ட இயக்கத்திற்கு ஈர்ப்பு சக்தி, கவர்ச்சி சக்தி காரணம் என்ற விஞ்ஞான உண்மை கை கொடுத்தது.

இப்பொழுதெல்லாம் காமதகனம் பார்க்கப் போகமுடிவதில்லை. நகரங்களில்தான் காமன் பண்டிகை அரிதாகிவிட்டதே! காமன் பண்டிகை பார்க்க கிராமத்துக்கு வந்தேன் என்று இப்பொழுது சொன்னால் என்னைப் பார்த்து சிரிப்பார்கள். நல்லவேளை! அந்த தத்வம் என் மனத்தை விட்டுப் போகவில்லை. அந்தக் காட்சி பண்டிகை தினங்களில் மட்டும் இப்பொழுது தென்படவில்லை. அனங்கன் ஆட்சி கண்முன் எங்கும் எப்பொழுதும் நடந்து வருகிறதே!

இந்த எண்ணங்களின் விளைவுதான் இக்காவியம். இக்கதையையும் என் மனப்போக்குக்கு ஒத்தவாறு அமைத்துக் கொண்டிருக்கிறேன்.

# அனங்கன் பிறப்பு

நாட்டின் வளமுரைப்பார் — பண்டை
  நயமிகு நாவுடன் நகருரைப்பார்.
ஊட்டும் நதி உரைப்பார் — எங்கும்
  ஒப்பிலாப் பொற்பயிர் உயர்வுரைப்பார்.
கோட்டைக் கொடி உரைப்பார் — காக்கக்
  கூடிடும் அணிவகை விரித்துரைப்பார்.
சூட்டும் மலருரைப்பார் — மாதர்
  சூல்விழிச் சிறப்பினை எடுத்துரைப்பார்.

நாட்டை முன் நிறுத்தும் — சொல்லை
  நாற்புறம் தேடினும் காணவில்லை.
தீட்ட நகர்ச்சிறப்பை — செய்யும்
  தெந்தென மும் பயன் அளிக்கவில்லை.
பாட்டை *அத்துக்களும் — அந்தப்
  பரமனுக் கரிதெனில் யாரறிவார்?
கேட்ட பெருங் கதையை — நேரே
  கூறுவன் செகத்தினர் மெய்யுணர்வார்.

அதுவென் றவர் உரைப்பார் — அன்றன்
  றணுக்களே என்றிவர் எதிர் உரைப்பார்.
துதிசெய் மூர்த்தமெல்லாம் — சேர்ந்து
  துலக்கிடும் மெய்யியல் என்றுரைப்பார்.
மதி என் றிவர் உரைப்பார் — அன்று
  விதிமுதல் என்றவர் மறுதளிப்பார்.
எதுவென் றிருந்திடினும் — இந்த
  இயக்கினைப் போற்றுதல் மெய்வழியாம்.



---

* அத்துக்கள் — எல்லைகள்



பேரும் ஊருமற்ற — இந்தப்
புதுமையில் பழமையின் தொடர்
[விளைவாய்
சாரும் வாழ்விடையே — நின்று
சாகசம் புரிந்திடும் மனமதிலே
கேரும் கூறுமின்றி — விம்மும்
நெஞ்சலை ஓய்ந்திட வழிகாணில்
சேரும் பெரும ஞான — கங்கைச்
செயலினைக் காணலாம் மனத்தோரம் ...

கங்கைக் கரைஅருகில் — ஆதி
கர்த்தரின் கலைத்திறக் குறைகளினால்
எங்கும் உயிரினங்கள் — மஞ்சள்
இலை என சருகென மங்குவதைப்
பொங்கும் மனத்திடையே — கண்டு
போக்கிடப் பெரும்தவம் ஏற்றஇரு
துங்க முனிவரர்கள் — வீணில்
துயரிடைக் கழிந்திடும் வாழ்வு கண்டார்.

தேவர் சிலரொருநாள் — அங்கு
திரிகையில் முனிவரைக் கண்டவுடன்
தாவும் பயத்துடனே — நின்று
தவமமர் காரணம் வினவிடவும்:
"கோவம் கொதிக்குதய்யா — பாரின்
கூத்தினை, துயரினைக் கண்டவுடன்.
யாவும் பிரும்மன் செயல் — என்ன
ஓர்ந்ததும் தவமிதில் ஆழ்ந்து விட்டோம்.

சோலையில் மரங்களில்லை — வெற்றுச்
சுள்ளியும் கள்ளியும் விழியுருட்டும்.
ஆலையில் கரும்புமில்லை — எங்கும்
அணில்களும் கிளிகளும் பசித்திருக்கும்.
காலையில் நதிக்கரையில் — பெண்கள்
கானலை, மலட்டினைப் புகழ்ந்துரைப்பார்.
மூலையில் கொடிகளின்மேல் — செல்லும்
முசுடு கட்டெறும்பினம் செத்திருக்கும்.



நாலு தலைக் குயவன் — ஆதி
நாள்முதல் சிருட்டியைக் கெடுத்து
[விட்டான்.
கோல நகை மடவார் — செய்து
குறுகிய ஆணின இயலமைத்தான்.
தூல உடம்பினுக்கே — காமத்
துடிப்பினை எழுப்பிடும் விசை அமைத்தான்.
ஆலமர விரிவாய் — உள்ள
அழகிய மனத்திறம் புறக்கணித்தான்.

காமத் தியல் முறையை — இன்றே
கருகிடத் தீயினில் எறி பிரும்மா.
நாமமோ நாரியரோ — அன்றி
நனவலைத் திவலையோ அங்குசமாய்
சேமம், தரும் புதிய — சிருட்டி
செய்யெனப் பசுபதி சீறிவிழும்
நேமனம் வாராதேல் — எங்கள்
நீளுயிர் தவத்தினுக் கவியாகும்.''



வேறு

கூறிய குற்றச்சாட்டைக்
குறித்திதை தேவர் சொல்வார்:
"தேறிய குறையைப் போக்கத்
திறம்பட வழியைக் காணும்
காரியக் காரர் ஆன
கார் முகில் வண்ணன் இங்கு
ஆறிய வித்தை கற்ற
அயனுடன் வருவார்" என்ருர்.

என்னலும் கண்ணின் முன்னே
இளநகை பூத்த நீல
மன்னனும் மறையோ ேைடு
மகிழ்வுடன் சிவனூர் யோகப்
பன்னகப் படமொ டுங்கப்
பாதைகள் ஆய்ந்து வந்த
நன்னயப் பேச்சைக் கேட்டு
நவிலுவார் தங்கள் காதை.

வேறு

" உலகெனும் விந்தை செய்தார்–அதனை
ஊக்கிட மதனனை அமர்த்தி வைத்தார்.
அலகெனும் கூர்விழியாள் — எழில்
அரசியை ரதியினை இணைத்துவைத்தார்.
கலவியின் நுண்நெருப்பை — அறியாக்
களி என இருவரும் இருந்துவிடில்
விலகிய உறவிடையே — எந்த
வித்தையும் பலித்திடா தறியீரா ?

மலைகளில் உலவிடுவார் — இன்றி
மாமரத் தோப்பிடை மயங்கிடுவார்.
அலைகளில் நெஞ்சழிவார்-தோன்றும்
அமைதியில் ஆமையாய்ச் சுருண்
[டிருப்பார்.
நிலைகுலை வெறியுடனே — வானில்
நெளிந்திடும் மின்னிடி கண்டவர்கள்
சிலைஎனச் சமைந்திடுவார் — என்னில்
திருவுடை உயிர்வளம் ஓங்கிடுமோ ?



நேருக்கு வேறாகக் — காணும்
நினைவுறும் காதலை அவரறியார் ?
வேருக்கு நீர்பாய்ச்சும் — நுட்பம்
வேதனும் தெரிந்திலன் அறியீரா ?
காருக்குக் கடல்துளி போல் — உள்ள
கனலினை உசுப்பிட அறியாமல்
பாருக்குத் தலையான — ஈசன்
பதிந்தனன் தவத்திடை ஆல்நிழல்கீழ்.

ரதியை நினைப்பதில்லை — அங்கன்
ரசனைகள் எதனையும் உணர்வதில்லை.
நதியின் ஓட்டத்தெழில் — அன்னாள்
நயனச் சுழலிலவன் காண்பதில்லை.
மதியின் மேனி தினம் — தங்கும்
மனைவிதன் மகிமையை மதிப்பதில்லை
சதிசெய் மாதுளைவாய் — போற்றிச்
சரணமென் றவள்மனம் புகுவதில்லை.



காமக் கலைவிசையை — இன்றே
கலைத்து நல் சாத்திரம் வகுத்தலின்றேல்
பூமி ஜனங்குறையும் — வாழ்வு
பொய்த்து வெளிரடைந்து பட்டுவிடும்.
சோமக் கலைபூண்டார் — நாங்கள்
சொல்லியா தெரிந்திடும் நிலையி
[லுள்ளார்?
சேமத்தை நாடும் சிவன் — அன்பின்
சிறப்பிது, அழகெனில் ஏதுசொல்
[வோம்?"

வேறு

ஆற்ருத துயரில் வந்த
ஆருத மொழியைக் கேட்டு
மாற்ருக வழியைக் காண்போம்,
மயங்காமல் இருப்பீ ரென்று,
காற்ருன அமுதை உண்டு
காலாறும் தேவர் நோக்கி
கூற்ருக மதனை இங்கே
கொண்டுநீர் வருவீ ரென்ருர்.

மாலயன் பணிமேல் சென்ருேர்
மதனனின் நகரம் நண்ணி,
மாலையின் உதிரம் தோய்ந்த
மாண்பினை வியந்து நிற்கும்
சோலையில் அவனைக் கண்டு
சுருக்கமாய்ச் சேதி சொல்ல
பாலையில் சூறை என்னப்
பாய்ந்தனன் வந்தா னிங்கே.



வந்தவன் வணக்கத் தோடு
வாயினைப் பொத்தி மெள்ளத்
தந்தையின் தாள்கள் பற்றித்
தரையினில் நீண்ட பின்னர்
சந்தையில் கள்ளனாகத்
தவித்திடும் அயனைப் போற்றி
" எந்தைஇன றழைத்த தேனோ "
என்னவும் அவர்கள் சொல்வார்.

வேறு

" பழிசுமந்து விட்டாய் — மதனா
பாவமேற்று விட்டாய்.
வழிபுரண்டு விட்டாய் — மதனா
வாகை தோற்றுவிட்டாய்.
எழுதி வைத்த வேலை — செய்யும்
எழுச்சி போன தென்ன ?
சுழி கிறுக்கலுண்டோ? — மதனா
சொல்லும் சொல்லைக் கேட்பாய்.

இலை உதிர்ந்த தெங்கும் — மதனா
இனிமை ஓய்ந்த தெங்கும்.
வலை களென்ன வாசம் — வீசும்
மலர்கள் வீழ்ந்த வாடி.
குலைகளாக ஈனும் — வாழை
குச்சியாச்சு தெங்கும்.
நிலைத்திருக்கும் மாந்தர் — வர்க்கம்
நிலை குலைய லாச்சு.



கன்னியான உமையாள் — மதனு
　கனத்தயோகி ஆனுள்.
சென்னிமீது சடையை — மதனு
　சேர்த்து வைத்து விட்டாள்.
தன்னந் தனியளாகி — மோனத்
　தவத்தி லாழ்ந்து விட்டாள்.
வன்மம் கொண்ட சூரன் — எங்கும்
　வாலே ஆட்டு கினருன்.

இந்திர னேய்ந்து விட்டான் — மதனு
　இன்பம் ஓடிப் போச்சு.
சந்திர னேய்ந்து விட்டான் — மதனு
　சாரம் காய்ந்து போச்சு.
மந்திர மோய்ந்து போச்சு — மதனு
　மகிமை முற்றும் போச்சு.
தந்திரம் ஒன்று சொல்வோம் — மதனு
　சலிப் படைந் திடாதே.

மோனமேற்ற சிவனுர் — மதனு
　மீளும் பாதை காண்பாய்.
ஆன தெதுவும் செய்து — மதனு
　அரனை எழுப்பி வருவாய்.
கூனல் கூடி உலகம் — மதனு
　குமையில் இன்பம் ஏது?
ஈனும் ஆசை இன்றேல் — நீயும்
　இருந்து யாது பயனும் ?''



"நல்ல வார்த்தை சொன்னீர் — ஐயா
நறுக்க மேதுமின்றி.
கல்லை உடைக்கச் சொன்னீர் — ஐயா
கையில் வில்லைத் தந்தீர்.
எல்லை அற்ற கடலைத் — தாண்ட
இலையை அனுப்பலுண்டோ ?
முல்லைக் கதவைத் தட்ட — ஐயா
மூர்க்கன் போவதுண்டோ ?

பணியைச் சொல்லி விட்டீர் — ஐயா
பாம்பைத் தூண்டி விட்டீர்.
துணிவில் சொல்லி விட்டீர் — ஐயா
தோல்வி மறந்து விட்டீர்.
பணிவில் ஒன்றுரைப்பேன் — ஐயா
பணியை மறந்துவிடுவீர்.
இணையில் ரதிச்சிறப்பை — ஐயா
எடுக்கும் வேலை வேண்டாம்"

•

என்ற சொல்லைக் கேட்ட — அவர்கள்
எரிந்து விழுந்து சொல்வார்.
"வென்றி காண்க என்றால் — வாதம்
வீணில் பேசுகின்றாய்.
நன்றி கெட்ட உயிரைப் — பேணில்
நலங்களேது காணும்?
சென்று வெற்றி கொள்வாய் —
[இன்றேல்
செத்தொழிந்து போவாய்."

ஃ

வேறு

சுடும்மொழி கேட்ட செல்வன்
சுழன்றிடும் பஞ்சைப் போல
நடுக்குடன் நின்ருன், தந்தை
நயனமும் ஏறக் கண்டான்.
வெடுக்கெனத் தலையை ஆட்டி
வெறுப்பெனும் கவசம் பூண்டு
"அடக்குவேன் சிவத்தை, இன்றேல்
அடங்குவேன்'' என்று சென்ருன்.

வழிஎதிர்ப்பட்ட இல்லாள்
மதியிலாப் பணியைக் கேட்டு,
கொழுனனின் முகத்தைக் கண்டு
குமுறிடும் மொழிகளோடு
அழுததைக் கண்ட மாரன்
"அடைக்கலம் நமக்கொன்றில்லை,
பழியவர் மேலே சாற்றிப்
பணிசெய விடுவாய்" என்ருன்.

''நாதனை நிமிடந் தோறும்
நெஞ்சிடா விளைவு ஈதோ?
வேதனை போக்க மாற்று
வேறெதும் இலதோ'' என்று
மாதவள் மண்ணில் சாய்ந்தாள்,
மங்கலம் இற்ருப் போல.
பேதையள் புலம்ப லுற்ருள்
புதுமடை வாயைப் போல.

வேதனை தாங்கா மாரன்
விலங்கிடும் ரதியைப் பார்த்து
“நாதனின் நேயம் நாடும்
நங்கைமார் துன்பத் தீயின்
சோதனை பொறுப்ப தின்றி
சொக்கிடும் இன்பம் நாடில்
வாதனைப் படுவன் யாரோ?
வதுவையின் பொருளென்?”
[என்றான்.

போதனை நெஞ்சிற் றைக்கப்
பொங்கிடும் எண்ணம் தோன்ற,
“சாதனை செய்தென் கற்பின்
சயத்தினை உலகோர் மெச்ச,
நூதன இன்பத் தோடு
நொறுங்கிய வாழ்வை மீட்க
மாதெனக் குரிமை தந்து
மருகளைழத் தேகீர்” என்றாள்.



வேறு

மலைஅர செனும் இமவான் — சொந்த
மகவுக ளிலைஎனும் தவிப்பிருந்தும்,
குலநலம் எண்ணிப் பலர் — சொன்ன
குறுகிய வழிகளைப் புறக்கணித்து,
கலைமதி பூண்ட சிவன் — கண்ணின்
கடைஅருள் பூத்திடத் தவமிருந்தான்.
நிலையுறும் நோன்பிருந்தும் — வீணில்
நிழலெனப் போயின பொழுதுகளும்.



மானச ரோவரிலே — ஒருநாள்
மயங்கலை புரண்டிடும் வேளையிலே,
கானக மாருதமும் — காலைக்
கதிரவன் கேடயச் செவ்வொளியும்,
தேனகத் தாமரையில் — தூங்கித்
திகழ்ந்திடும் மோனமும் பேரெழிலும்
வானக மிதுவெனவே — வாய்ந்த
வனப்பினி லாழ்ந்து லயித்திருந்தான்.

தாமரைத் தொட்டிலிலே — பொதிந்த
தாதெழில் மெத்தையின் தனிமை
[யிலே
காமரு சீர்மகவின் — சிவந்த
கால்கள் உதைத்திடும் புதுமை
[கண்டான்.
சாமரம் ஆக ஒளி — கனிந்த
தாதிக ளாகிட பறவைக்குரல்
ஓமெனப் பிள்ளையினை — பணிந்த
ஒயிலினைக் கண்டுளம் நெகிழ்
[வடைந்தான்.

சொப்பனச் செந்திருவை — எங்கும்
தோன்றுயிர்ப் பேரெழில்
[காரணத்தை,
கற்பக நீழலினை — எல்லாக்
கவலையைப் போக்கிடும் குலக்
[கொடியை,
விற்பனர் வாயடைக்க — எங்கும்
விளைந்துள மெய்யொளி மூலமதை
நற்றவ ராஜனெழும் — அன்பு
நிலையினில் எடுத்தரண் மனை
[அடைந்தான்.

இந்திர ஜால வித்தைக் — காரன்
எதிரில மர்ந்திடும் கும்பலின்முன்
மந்திர மாங்கொட்டை — வைத்து
மறுபுறம் திரும்புமுன் மாம்பழத்தைத்
தந்திர சக்தியினுல் — காட்டித்
திகைத்திடும் வியப்பினில் ஆழ்த்து
[தல்போல்
சுந்தரக் குமரியெனக் — காலம்
சுழன்றிட குழந்தையும் மாறிவிட



பெண்ணெனப் பிறந்துவிட்டால் —
[பெற்ருேர்
பெருமையாய்த் திருமணப் பேச்
[செடுப்பார்.
விண்ணுயர் மலேஅரசன் — தானும்
வியத்தகு நாயகன் பொறுக்க
[லுற்ருன்.
கண்மணி போன்றவளின் — நெஞ்சக்
கருத்தினைக் கேட்டதும் துணுக்க
[முற்ருன்.
"எண்ணம் வேறுளதாமே — ஆதி
ஈசனைத் தவிர்த்தெதும் வேம்பாமே!"

நெஞ்செழும் நாயகனை — போதும்
நினைந்து நீராகிடும் நோன்பெடுத்து,
அஞ்சுதணல் நடுவில் — அண்டை
அமைந்த குகைதனில் பிறகமர்ந்து
விஞ்சிடும் வேனிலிலும் — வாடை
வீசிடும் காற்றிலும் இரவினிலும்
தஞ்சமெனத் தவத்தில் — ஆழ்ந்த
தனியளைக் கண்டவன் பேச்
[சொழிந்தான்.



மன்மதன் ரதியுடனே — ஒருநாள்
மங்கிய மனத்துடன் குகையருகில்
வந்ததும் சிலிர்ப்பெழவே — ஆய
வடிவழ குமையவள் தவமறிந்தான்.
“சிந்தை சிவத்திருந்தால் — பெண்ணே
சேர்வழி இதுவல; சிறுபேதாய்
வந்தனே செய்தவரை — உன்மேல்
மால்கொளச் செய்குவம் வா”
[வென்றுன்.

ஆலமரத்தடியில் — மோன
ஆறரித் தோடிடும் அழகெதிரில்,
மூலப் பெரும் லயிப்பில் — ஆழ்ந்த
மோகன முத்திரை அமைதியிலே
கோல மிகுஞ்சுடராய்க் — காணும்
குற்றஞ்செய் சிவத்தினைக்
[கண்டவுடன்
மேலென மன்மதன்தன் — அம்பை
விட்டதும் மையக்கண் வெடித்த
[தையோ !

எழுந்த தூழின் ஒலியா — அன்றி
எக்களிக்கும் கடலா ?
விழுந்த தென்ன இடியா — அன்றி
வெடித் தெழுந்த மின்னு ?
சுழிந்த தென்ன நாற்றம் — என்று
சுற்றும் பார்த்த போது
அழிந்த காமனங்கு — நீருய்
அணைந்த கோலம் கண்டாள்.

ஆனகோலம் கண்ட — பேதை
ஆவென் றலறி வீழ்ந்தாள்.
சோனையான கண்ணுள் — கௌரி
சொல்லா தோடி விட்டாள்.
மோனம் போன ஈசன் — கண்முன்
முடுகும் பெண்ணில் ஆழ்ந்தான்.
வான மெங்கும் விம்மல் — என்னில்
மண்ணி லெங்கும் மகிழ்ச்சி.

வேறு

பாய்ந்திட வடவைத் தீயும்,
பாழ்த்திட மதனன் மெய்யும்,
சாய்ந்தமன் மதனுர் மங்கைப்
பித்தென மண்ணைச் சாடி,
காய்ந்திடும் முடியைப் பிய்த்தாள்,
கலங்கிட உலகைச் செய்தாள்.
ஆய்ந்திடும் திறனி ழந்தால்
அழுவதற் கெல்லை உண்டோ ?

இங்கிலை மாருச் சோர்வில்
எரிதழல் விட்ட நீற்றைப்
பொன்னெனக் கொள்ளும் பித்தைப்
போன்றவள் கண்கா ணித்து,
மன்னனைக் காணு வாழ்வில்
மாய்தலே முத்தி என்று
தன்னுயிர்ப் பகையாம் ஆலின்
நீழலில் சமைந்து விட்டாள்.



∴



காய்ந்திடும் கதிரோன் தேரின்
கடும்வெறி எழுப்பும் மூட்டம்,
பேய்ந்திடும் நிலவின் தண்மைப்
போதையின் பழய ஆட்டம்,
வேய்ந்திட இனிய பந்தல்
விரும்பிடும் தென்றல் — ஏதும்
ஆய்ந்திடாத் துயரம் ஆழ்ந்தாள்,
அசைந்தது ஆமை நாழி ... ...

உலகுடன் உம்பர் நாடும்
உய்வுறப் பணிஇட் டோர்கள்
கலங்குமங் கஜவேள் சென்ற
பின்கணுக் கலைந்தாற் போல,
"விலங்கென இருப்பின் இங்கு
விஜயனாய் அன்னான் மீளல்
விலக்கென" அயனும் மாலும்
வெருண்டுபின் வந்த நேரம்

தருக்களின் வெம்பும் பிஞ்சோ ?
தவறிமுள் சிக்கும் பட்டோ ?
எருக்குழி வீழ்ந்த மின்னோ ?
என்றிடத் தோன்றும் சோக
வெறுப்புடன் ரதியும், அண்டை
மேடெனச் சாம்பல் திட்டும்
குறித்தனர், கண்ணீர் விட்டார்,
கோவென ஓல மிட்டார்.





கின்னரத் தேவர் யாரோ
கெக்கலி கொட்டிக் கொண்டு
அன்னவர் முன்னம் ஆடி,
அம்பிகைப் பெண்ணை இன்று
முன்னவன் மணப்பான் என்று
முகிழ்த்தனர் சேதி ஒன்றை.
நன்றுநன் றென்ற வர்கள்
நாடினர் ஆலின் நீழல்.

வடிந்ததும் குமுறும் சோகம்
வனிதையை நெருங்கி மெள்ள,
"விடிந்தது பெண்ணே! உன்றன்
வியப்புடைக் கற்பின் தீயால்.
மடிந்தனன் மதனன் என்று
மண்ணிடை மக்கல் ஏனே
தடஞ்செயும் சிவனுர் மன்றல்
சமய"மென் றெழுப்பும் நேரம்,

கடிந்தனள் வைரி என்றும்,
காமலர் காலன் என்றும்,
இடிந்திட இல்லம் செய்த
இடிதழல் வெள்ளம் என்றும்,
தொடர்ந்துபின் நீலிக் கண்ணீர்
சொட்டிடும் சூழ்ச்சி என்றும்,
வெடித்தனள். மற்ருேர் மாற்றில்
படிந்தனள் விடிவைக் கேட்டு.



"இமயவான் வீட்டு மன்றல்
இக்கணம் பார்க்கச் செல்வோம்.
சமயமாய் இருப்பின் ஈசன்
செய்கையைச் சுட்டிக் காட்டி,
குமையும்பெண் தாஸி போகக்
கொன்றஅ நீதி கூறி,
அமருவோம், ஆவ தாக"
என்றதும் ரதிஅ லர்ந்தாள் ......

வேறு

மான்மறி ஏனமும் தீக்குரல் யாளியும்
மாமத வாரணக் கூட்டமுமாய்,
மீன்இறை கொக்கொடு சக்கர வாகமும்
மாமர கோகில ஊர்வலமாய்,
வான்தரு பூக்களும் வல்லிகள் வாசமும்
வாகனத் தென்றலின் மாட்சியுமாய்
தேன்அடை ஈர்த்திடும் ஈக்களின்
[சீரொடு
சேர்ந்திடும் மன்றலின் கும்பலையும்,

முன்புறம் இந்திரன் ஊக்கிடும் அப்சரஸ்
மோகன ஊர்வசிக் கூத்திடையில்
நந்தியின் கைதரும் மத்தள வரிசையில்
நத்திடும் சொன்நய விந்தையையும்,
பின்புறம் நாரதர் தும்புரு கின்னரர்
பின்னணி இன்னிசைச் சூழ்ச்சி
[யையும்
மன்றிடைத் தீமுனர் மாலைகள்
[கொண்டொளிர்
மாமண வாளரி ருப்பதையும்,

கண்டதும் அம்பெனக் கவ்விடும் [காட்சியில்
கைப்பைம றந்தனர் மாலயனும்.
தண்டெனச் சாம்பிடும் தேவிகுறித்ததும்
தாவினள் தீமுனர் வேங்கைஎன.
சண்டிகை என்றிட ருத்திரம் [பொங்கிடச்
சாய்ந்திடும் பெண்மையின் சோக [மெலாம்
மண்டுபுயல்என, மாமழை யோவென
மன்றிடை மோதி வெடித்தது பார்!



வேறு

"தந்தம் கடைந்தெடுத்தீர் — ஐயா
தாரகை எழிலி ணைத்தீர்.
விந்தத் திதழெடுத்தீர் — ஐயா
வேளவர் கண்ண மைத்தீர்.
சொந்தக் குழலி தென்றீர் — ஐயா
சொக்கிசை உரிமை தந்தீர்.
பந்தப் படுத்திவிட்டு — ஐயா
பாவியாய்ப் போன தேனோ?

ஆழி மனமளித்தீர் — ஈர்க்கும்
அம்புலி அணைத்துவிட்டீர்.
ஊழி இறங்குமட்டும — பாரில்
உத்தமர்க் கரசளித்தீர்.
நாழி திரும்புமுன்னர் — ஐயா
நாக்கினைப் புரளவிட்டீர்.
தாழி உடைந்துவிட்டால் — ஐயா
தயிர்க்கு வாழ்வு முண்டோ?



அன்புடன் தானம் செய்தால் — ஐயா
அனலிடும் உரிமை வருமோ?
என்புடன் இருக்கு மென்றன் — ஐயா
இணைப்பிணை மறக்க லாமோ?
கன்மனப் பித்தன் என்ன — ஐயா
கனவிலும் கருதாத் தவற்றை
இங்ஙனம் திருத்த லாமோ? — ஐயா
இறைவனின் பொறை இதாமோ?

மந்தமென் றெணை மதித்த — ஐயா
மாமதிக் கேது சொல்வேன்?
மன்மதர் எரிந்த பின்னர் — ஐயா
மஞ்சளுக் கேது மகிமை?
சந்தனம் குங்கு மங்கள் — ஐயா
சபைவரத் தகுதி உண்டோ?
உந்துமும் மாசை யோடிங் — கின்னம்
உமையுடன் இருக்க லாமோ?''

வேறு

இத்துயர் மொழியின் தீயை
ஏற்றிடும் ஆற்றல் இல்லாப்
பித்தெனச் சிவனார் நின்றார்
பேதையின் வாதம் தின்ன.
வித்திடும் பொறுப்பைப் பெற்ற
பிரும்மனும் மாலும் ஒய்ந்த
மத்தென நின்றார் மன்றில்,
மயங்கினார் சிந்தை இற்று.

"நின்றிடில் நடப்ப தென்னே
   நேர்பிழை செய்த பின்னர்;
மன்றலில் ரதியின் ஓலம்
   மனத்திலோர் நஞ்சைக் கூட்டும்,
குன்றெனத் திட்த்தைக் கொண்டு
   குறையினைத் தீர்ப்பீர் அன்பே!"
என்றிடும் உமையாள் தீர்ப்புக்
   கிணங்கினன் விழிதி றந்தோன்.



வேறு

தருணி மீது தாப முற்ற போதையில்
கருணையோடு கண்ணைமூடி ஈசனும்
தருணமென்று தலைவ சித்த சோமனை
வருண மந்திரம் வளர்த்து சுப்பினர்.

கோடை ஏற நீர்கு றைந்த ஆறுகள்,
சாடை மாறி சோகையான
[சோலைகள்,
காடை, கோழி, காட்டி லோய்ந்த
[மாக்களும்
வாடை பட்டு வான்வியக்க ஓங்கின.

தென்றலான கிள்ளை ஈர்த்த தேரிடை
குன்றமாயி ருந்த தூள்கு விந்தொரு
வென்றிவேல்க ரும்பு வில்ம லர்ச்சரம்
என்ற னங்க னேல்பு மாறி
[நின்றனன்.



கண்ட போது கைலை எங்கு மேகமாய்
வண்டுபோல வாழ்த்து மொய்க்க
[ஈசனை,
எண்டிசைம கிழ்ச்சி கண்ட ஏந்திழை
மண்டு மன்பன் மாற்றமேற்றுக்
[கூடினள்.

கௌரி நெஞ்சு கரை புரண்டு பாயுமே.
கவரி மான்க ளோட கந்தம் வீசுமே.
அவுரி வண்ண னருளி னீரம் வானிலே
கவரும் நீலம் என்று காண மூடுமே.

மகர யாழ்ம துக்க ளேந்தி மீண்டதும்
சுகமெ னப்பண் சூழ்ந்த தெங்கு
[மேகமாய்.
முகைவி டாத மொட்டுங்கூட காவிலே
அகமொழிந்து அள்ளி வாசம் வீசுமே.

ஆடுங் கூத்த ரம்பை யர்வி டுத்தனர்.
வாடு மிந்தி ரன்ம தர்த்தெ ழுந்தனன்.
சேட நாத ஞேடு சேர்ந்து வேதனும்
ஏடெ டுத்த னங்க நூலி சைத்தனன்.

சத்தி யில்சி வம்க லந்த ஒன்றினை
பத்தி யோட னங்க பக்தன் பேடுடன்
நத்தித் தாள்வி ழுந்து நீள மூலவன்
நித்த ஈர்ப் பென் றெங்கும் நிற்க
[வாழ்த்திஞன்.

வேறு

வாழ்த்தினைப் பெற்றெழுந்த —
வல்லமை தரும்புது [அனங்கன்
[நிலை அடைந்தான்.
வீழ்த்திடும் துயரகற்ற — உலகில்
விளங்கிடும் இயற்கையின்
[விசைதிருத்தி
ஆழ்ந்த பல் ஈர்ப்புகளை — உடனே
டமைந்திடும் படிஅவன் ஏவிவிட்டு,
சூழ்ந்திடும் அரசினெல்லை — விரைந்து
சோதனை செய்திடும் ஆசை
[கொண்டான்.

எண்ணவும் எழுந்ததென்றல் — தேரில்
இசைத்தன மீனினக் கொடிக
[ளெல்லாம்.
விண்ணெழும் முழுமதியம் — தேரின்
தனிக்குடைப் பெருமையை
[ஏற்றிடவும்
வெண்நிலாச் சீலையென — தேரில்
விழுந்தொரு கனவெழில் கூட்டிடவும்
நுண்கடை ஆணி என — அச்சில்
நுழைந்திட வந்தது நல்லிசையாழ் !

தாரகை வீசுமொளி — பூந்தேர்
தட்டொடு எழில் மிகு நுகத்தடியாய்,
கூரலகுடைக் கிளிகள் — தாமாய்க்
கூடின தேரின்முன் பரிகளென;





சூரிய காந்தி மலர் — முன்னே
சொகுசுடன் முளை எனப்
[புகுந்தவுடன்
சேறக விந்தமலர்த் — தண்டின்
நூலிழை சேர்ந்தது தாம்பெனப் பார்!

வேறு

கரும்புவில் நெளிவைக் கண்டு
கருவண்டு நாணைப் பூட்டி,
அரும்பிட சோகம் நீலம்
மாமலர் வனசம் முல்லை
சரம்மிகத் தூணி சேர்த்து
சயந்தரு தென்றல் தேரில்
விரும்பிய ரதியி னோடு
விஜயமும் செய்யப் போந்தான்.

வசந்தமும் முறுவல் பூத்து
*வந்தியாய் வருகை சொல்லக்
கசந்துதம் கருகும் வாழ்வைக்
காய்ந்திடும் சோலை எல்லாம்
பசுந்தளிர் காது தோன்றக்
கீர்த்திமெய்ப் பாவை மாந்தும்.
உசந்திடும் மலர்கள் சீவன்
ஒயில்மணத் தந்தி மீட்டும்.

* வந்தி — கட்டியக்காரன்

வேறு

சோலே விட்டு சோலே சென்ற
[பேடையை
மேலும் மேலும் மோக மூற கோகிலம்
கோலம் காட்டென் றேங்கி யேங்கி
[கூவுதல்
ஞாலம் சார னங்க னம்பின் நாதமோ?

மதிநி றைந்து வானி லேறும் மாகடல்
ரதிஎ முப்ப னங்க ராச மாயையில்
இதழெ னத்த ஞசை யாம லேகளால்
அதர பான மாழ விண்ணே நாடுதோ?

விண்ணே நோக்கி வீசிவிட்ட கல்லுடன்
பண்ணே யார்ம ரம்ப முத்த வர்க்கமும்
மண்ணே நாடி மாய மாயி றங்குதல்
பெண்ணே ஒன்றும் பெட்ப தன்றி
[வேறெதோ?

அந்த ரத்தி லங்கு கோளம் யாவுமே
சொந்த சக்தி யற்று வானில்
[தொங்கினும்
பந்த முற்ற பாவை யென்றி சைந்திடல்
சுந்த ரன்தொ டுத்த வாளி சூழ்ச்சியோ?





மீறி நிற்கும் சீவ சாதி வேட்கையைக்
கூற வந்த சொல்லின் கோக்கள்
[ராதையாய்
மாறு வேட மிட்டு யர்த்திக் காட்டினும்
ஊறி உள்ளு றைந்த உண்மை
[வேறெதோ?

வதனங் கண்ப டாத வேளை காதலன்
புதும லர்கள் பொங்கு தென்றல்
[மற்றதில்
மதியி ழந்து மங்கை எண்ணி சாம்புதல்
ரதியி னிப்ப னங்க ரங்க மர்மமோ ?

கொல்லை வண்டு தொட்டு கோனின்
[ஈறதாய்,
புல்லைத் தொட்டு பூக்கும் வானம்
[ஈறதாய்,
எல்லை யில்அ னங்க னீட்டும்
[வெற்றியை
சொல்லைக் கொண்டு சொல்வின்
[ஞானி உள்ளனோ?

—

ஃ

# குயிலின் சுருதி

ஆற்றங் கரையருகே
அண்ணாந் தெழுந்துபல
நூற்றுக்கணக்கான
நுண்ணிசைகள் கொட்டிவரும்
சோலை அரசின்மேல்
கோகிலமாம் சுந்தரியாள்
நாளை வரவிருக்கும்
நன்னிலைக்கு நாயகனோ
டுற்ற குடும்பநிலை,
ஊரிருக்கும் உண்மைநிலை
கற்றுக் கொடுப்பவளாய்க்
கண் சொக்க வாய்திறந்தாள்.



"நீலக் குயிலா!
நெருப்புக்கண் வேளவனே!
சாலை வழிசெல்வோர்க்
காதுகளில் காதலெனும்
நின்னிசையைக் கொட்டி
நிறுத்திவிடும் மன்னவனே!
மன்றலிலா தென்னை
வசஞ்செய்த மாயவனே!
கன்னி கருத்தழிந்தேன்.
காதலெனுந் தீயுண்டேன்.
உன்னி விளைவதனை
ஊகிக்க மதியற்றேன்.
பின்னர் நடந்ததுவும்,
பேடையென ஆனதுவும்,



கன்னங் குழிந்ததுவும்,
கண்வளையம் வீழ்ந்ததுவும்,
வண்ணக் குயில்குஞ்சு
வந்துவிடும் என்பதுவும்,
எண்ண மறந்துவிட்டாய்.
ஏந்திழையாள் ஏதுசெய்வேன்?
குந்திவரக் கூடுண்டா?
குயிலா! குறைவிதனை
புந்தியில் நீ கொள்ளவில்லை.
போதை வசமானாய்!
கொம்பில் புளிகுளிக்கப்
போமா, கொடுமழையில்
தம்பிக்கு மாரி தயவேதும்
காட்டிடுமா?
கன்மனமாங் காதலனைக்
கண்டிருப்போம் என்றாலும்
தன்மயமாய் உன்னைப்போல்
தாரணியில் கண்டதில்லை.''

என்று புலம்பிடவும்
ஏறிவரும் ஏக்கங்கள்
சென்று மரத்திடையே
தேய்ந்ததொரு மாற்றொலியாய்.
நீலக் கருங்குயிலன்
நீளும் மொழி கேட்டு
ஞாலம் கவர்ந்து வரும்
நாவை அவிழ்த்துவிட்டான்.

"பிறவி எடுத்துவிட்டேன்,
பிழையில்லா வாழ்வுற்றேன்,
பிறரும் அனுசரித்தால்
பேரின்பம் இங்கெய்தும்.
தன்னை மறந்து,
தருக்கின்றி எல்லார்க்கும்
நன்மை விளைக்கத்
தொண்டாற்றின் நானிலத்தில்
சொத்துச் சுதந்திரமும்,
சூழ்வேலிக் காப்புகளும்,
எத்துச் சிறுவழியும்,
ஏமாற்றும் பொய்யும்,
அரசும், அடிமைத்
தலைஎழுத்தும் காய்ந்த
சரகாய்ப் பறக்காதோ?
சாயுச்யங் கிட்டாதோ?
காலை எழுந்திருந்து
காதங் கடந்துவந்து,
சோலை அரசமரச்
சோதிக் கிளை அமர்ந்து
நாதப் புனலாடி
நான்பாட ஊரெல்லாம்
மோதும் சுருதி இன்பம்.
முங்கிப் புனல்சிரிக்கும்.
யோசித்துப் பாடேன்;
உகப்பாக நான்பாடேன்;
காசுக்குப் பாடேன்;
களிகூட்ட நான்பாடேன்;





வாசி வருதல்போல்,
வாசம் விசிறல்போல்,
மாசி விசும்பில்
மதியம் வழிதல்போல்,
நாதப் புனலாடி •
நான்பாடத் தேனலைகள்
மோதி மயக்கெங்கும்
மூட்டும், ஒளிசிரிக்கும்.
பாட்டைத் தவிர்த்த
பாவமெதும் நானறியேன்.
வாட்டம் மிகுந்த
வயிருனல் பக்கமுள
பூச்சிப் புழுவும்,
புதுக்கனியும், இல்லையெனில்
காச்சுத் தழைக்கும்
காய் தளிரைத் தின்றவுடன்
நீட்டி முழக்கிவரும்
மாந்தர் நெறி தவிர்த்து
மீட்டுங் குரலெடுத்து
மெய்யியலை வர்ணிப்பேன்.
அப்பனுக்குப் பிள்ளை
அகண்டிருக்கும் சொத்
சுப்பரையே சூழும், [தெல்லாம்
சருக்காரின் சட்டமிது.
இந்த நிலங்கீறி
ஏர்பிடித்துச் சேருக்கி,
சொந்த நிலம்போலச்
சுளிக்காது போராடிக்



கும்பி வளர்க்கக்
குறிவைக்கும் ஏழைகளும்
நம்பி அவமாவார்,
நாழிக் கணக்குவரும்.
சட்ட சதிராடும்
சுப்பருமே சேர்சேராய்க்
கொட்டிக் குவிப்பார்;
குபேரனுய்த் தான்வாழ்வார்.
வீணுக் குழைப்பு!
வினைகாரர் சூழ்ச்சியிது!
நாணும் நடப்பு,
நமக்கென்ன என்றேநான்
ஏதும் நினைப்பின்றி
என்பாட்டில் பாடுகிறேன்.
மோதும் குரலின்
முழுப்பொருளைக் கேட்பாய் நீ.

"சுகமீட்டும் சீவர்க்குச்
சொத்துண்டோ பெண்ணே!
அகமோட்டும் முத்தர்க்
ககமுண்டோ, கண்மணியே!"
என்று விளக்கும்
நவமொழியில், இன்குயிலாள்
கன்றி மயங்கிக் கருத்திலனுக்
கொன்றுரைப்பாள்.
"பேதை அறியேன்
பெருநெறியின் போக்கேதும்,



வாதை அறிவேன்
வழி என்ன" சொல்லென்றாள்.
"வாடீ திருவுடையோய்
வாகைமரக் கொம்பண்டை.
கூடுங் கவட்டின்மேல்
கூடொன்று தென்படலாம்.
காகம் உறையுமிடம்,
காருக்கு நல்ல இடம்,
மோகம் முகிழ்க்குமிடம்;
முட்டைகள் விள்ளுமிடம்.
அஞ்சா ததிலிருப்பாய்.
சோர்வை அகற்றிவிடு.
பஞ்சாய்க் கவலை
பறந்துவிடும், நீகாண்பாய்."...

வாகைக் கவட்டில்
வலிவந்த வேளையிலே
காகம் ஒழிந்த
கருநொச்சிக் கூட்டிடையே
குயிலி குனிய
பகற்பொழுதில் வெண்மதி
துயிலும் இருமுட்டை [போல்,
முன்னிருக்கச் சோர்வுற்றாள்.
"மயக்கம் அழுத்த
மரமெல்லாம் தள்ளாட
வியக்கும் பொழுதில்
விழுந்தாள் வினையற்றாள்.

மீண்டும் நினைப்புற்று
　　மீகான்போல் பார்க்கையிலே
பூண்டின் நிழலூடே
　　பூக்கும் புதுமுளைபோல்
இன்னும் இரண்டிருக்கப்
　　பேடை முறுவலிக்கும்.
பின்னும் களிப்போடு
　　பேசக் குரலெடுக்கும்.
அண்டைக் கிளையில்
　　அமர்ந்திருந்த ஆண்குயிலும்
கண்டு களிப்புற்றுக்
　　கண்மணிக் கொன்றுரைக்கும்.



"அன்னைப் பதம்பெற்ருய்!
　　பெண்ணே! அடைக்காக்க
நின்னை நியமிக்க
　　ஞாயங்கள் ஏதுமிலை.
மண்வாழ்வின் பொய்நெறியை
　　வீழ்த்தி, மறைகாட்டி
விண்வாழ்விங் கெய்திடவே
　　வந்தோம் — வழிகாட்டி.
அறியார்க் கறிவுடையோர்,
　　இல்லார்க் கிருப்புடையோர்
குறியால் குணங்களினுல்
　　கொல்லும் குறைஅழித்து,
நல்வாழ்வு நாட்டிப்
　　புதுநெறியை உண்டாக்கி



இல்வாழ்வு காட்ட
முயன்றிடுவோம். ஏங்காதே.
காகம் திரும்பிவரும்
காவென்னும் ஓசையதோ!
வேகத் தெழுந்திடுவாய்.
வீணெண்ணம் கொள்ளாதே."
சாம்பல் நிறத்தாளும்
சாம்பிச் சிறகாட்டி,
ஆம்பல் பகற்பொழுதில்
ஆற்ருமையோடுறங்கும்
சோகம் தளும்ப,
துடுக்கின்றி ஊமைபோல்,
மோகம் விலக்கி,
முடுக்கிடுவான் பின்செல்ல,
காக்கை திரும்பி,
கவடின்றி முட்டைகளைக்
காக்கும் தொழிலைக்
கருத்துடனே கைப்பற்றும்.

செல்லச் சிலநாட்கள்
சிந்தித்த தீங்குயில்கள்
மெல்லக் கிளர்ந்தனவாய்
மேவிடவும் கூட்டண்டை.
விண்டிருந்த தூளில்
விழிக்கும் குயிற்குஞ்சை
கண்டுவிட்ட மென்குயிலி
கண்ணுற்ருள் மற்ருென்றை.



தத்தித் தரை யிடையே
கண்ணுருட்டித் தன் இடத்தைச்
கத்தும் கருங்காக்கைக்
குஞ்சுகளைப் பார்த்தழுதாள்.
"திருட்டுத் தன்முள்ள
தந்தைக் கிவையன்றி
பிறக்கும் வழியேது பித்தா"
எனக் கடிந்து
பொங்கும் குரலில்
புதுநெறியைத் தூற்றுகையில்
மங்கை மயக்கோட
மாங்குயிலன் சொல்லிடுவான்.

"செத்த கருத்துச்
சிலையோடும் சொற்களிவை.
சொத்தும் சுதந்திரமும்
சொக்கப் பனையேறில்
மிச்சம் இருப்பேது
மீளும் புகையின்றி?
நச்சுப் படுத்துகிறாய்,
நாவாய்போல் தத்தளிப்பாய்.
மடையர் மயங்க,
மறைத்துவிடப் பொய்நெறியை
கடமை, பொறுப்பென்று
கற்பனைகள் கட்டுவதோ?
மலரைச் சுமக்கும்
மருதாணி தன்மலரைப்



புலரும் புதுவெய்யோன்
போக்கிடுவான் என்று
கருதிக் கவல்கிறதோ?
கண்ணீரும் விட்டிடுதோ?
எருதின் வலிக்கிறங்கும்
ஈயின்வாழ் வென்ஞகும்?
பொய்ப்பொறுப்பை விட்டால்
புவனத்தில் தாஞக
மெய்வாழ்வு தோன்றும்,
மினுக்கும் பலபுதுமை,
மேதை தனக்கிருப்பின்
மீதியுளர் யாவர்க்கும்,
வாதை அழித்துவிடல்
வாழ்வின் வழியன்ரோ?”

என்னப் புரட்சி
எதுகையினே மாங்குயிலன்
சொன்ன மொழியில்
சுருண்டோடிப் பக்கமுள
மாமரத்தைச் சார்ந்து
பெடையும் மயங்கையிலே,
தாமருந்தி, தம்குஞ்சைப்
பேணும் உணவோடு
வெத்துலகைப் பொன்ஞக்க
வீசும் கதிரொளியில்
கத்தித் திரும்பி வரும்
காகங்கள் கண்டனளே.

கூட்டை அடைந்திடவும்,
குஞ்சுகளும் வாய்திறக்க
வாட்டம் அடையாமல்,
வேற்றுமையைக் காணமல்,
நீட்டும் அலகால்
நிரப்பியபின் அவ்வயிற்றை,
வீட்டின்கீழ் தத்தி
விழியுருட்டித் திண்டாடும்
குஞ்சைக் குறித்திடவும்,
மற்றெருகால் சென்றெங்கோ
கொஞ்சம் புழுக்கொணர்ந்து
குஞ்சுக்கும் ஈந்தனவே.
கும்பித்தீ நீராகக்
குஞ்சும் குதூகலமாய்
எம்பிப் பறக்கும்
இலக்கணத்தில் ஈடுபடும்.



கணவன் விரித்த
கனவெல்லாம் கண்முன்னே
தணலின் அழகோடு
தண்ணீரின் தன்மையுடன்
புத்துலகாய் மெய்ப்படலைக்
கண்ணுற்ற பெண்குயிலாள்
கத்தா தகமகிழக்
காவனத்தில் கண்பிறக்க,
நீலக் குயிலன்,
நெருப்புக்கண் நாதரிஷி,



சோலைச் சுருதியாயச்
சொக்கிசையை அள்ளி
மாலை வழிமீளும் [விட்டான்.
பாட்டாளி மக்களுடன்
நாளை வயிற்றை
நனைக்கும் வகையற்றோர்
ஏறுங் குயிலோசை
மீட்டும் எதிரொலியால்
சேரும் புரட்சிச்
சிசுவை வரவேற்பார்;
முற்றும் வளர்ந்து
முடிசூடும் பொன்னாளின்
வெற்றிக் கணுக்காண்பர்,
வேனிற் குயிலிசைக்கும்.

---

# பிழை திருத்தம்

| பக்கம் | வரி | பிழை | திருத்தம் |
|---|---|---|---|
| 8 | 5 | நாடினன் | நாடினள் |
| ,, | 6 | நற்பயனை | நற்பயன் |
| ,, | 20 | ய்யில் | மெய்யில் |
| 26 | 27 | பிள்ளைத் | பிள்ளை |
| 27 | 23 | துஞ்சம் | துஞ்சும் |
| ,, | ,, | வீறை | வீற்றை |
| 28 | 5 | நன்று என்றனர் | நன்றுநன் றென்றனர் |
| 29 | 25 | ஒழித்தது | அழித்தது |
| 30 | 19 | உணரும | உணரும் |
| 32 | 10 | டுங்கினர் | டுறங்கினர் |
| ,, | 26 | டில்லிடம் | டிவ்விடம் |
| 34 | 5 | கும்பலாய்க் | குப்பலாய்க் |
| ,, | 14 | மூடி | மூடிக் |
| 35 | 6 | மோட்டில் | மேட்டில் |
| 40 | 14 | பரிக்ஷை | பரீட்சை |
| 46 | 5 | சித்தரிக்கும் | சித்திரிக்கும் |
| ,, | 10 | விறட்டி | வறட்டி |
| 66 | 11 | இறை | இரை |
| 74 | 10 | எண்ணி | எண்ணிச் |
| 79 | 24 | மூங்கிப் | முங்கிப் |
| 81 | 5 | சட்ட | சட்டச் |
| 83 | 20 | வந்தோம் | மீண்டோம் |
| 84 | 11 | தளும்ப | ததும்ப |
| 85 | 3 | கத்தும் | சுத்தும் |
| ,, | 4 | பார்த்தழுதாள் | சூழ்ந்தழுதாள் |
| ,, | 5 | தனமுள்ள | தினவுள்ள |
| 87 | 10 | மற்றெருகால் | மற்றொருகால் |
| ,, | 22 | பெண்குயிலாள் | பூங்குயிலாள் |
| 88 | 1 | சுருதியாயச் | சுருதியாய்ச் |

